உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப் பத்திரிகை.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி-௩0] பிரஜோத்பத்தி௵ தை௴ [பகுதி-௩.
Vol. XXX. January-February-1932. No. 3.

உள்ளுறை.



பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா—8.
வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.

1932.

Printed by Srimathu RAJA M DINAKARA BAHADUR AVL, and published by THIRU. NARAYANA IYENGAR, at the Tamil Sangam Power Press, No. 54, New Jail Road Madura.

# வேண்டுகோள்.

---

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதமொருமுறை வெளிவரு
இச்செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிடுமாறு பொருளுரை களுப்
மதிப்புரைவேண்டிப் புத்தகம் முதலியனவும் அனுப்புவோர் அவற் றை
பத்திராதிபர், செந்தமிழ், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும்,

செந்தமிழில் வெளியிடுமாறு அனுப்பும் விளம்பரங்களையும் பாண்டியன்புத்தகசாலைக்கு நன்கொடையாக அனுப்பும் புத்தகம் முதலியவைகளையும், செந்தமிழ் செந்தமிழ்ப்பிரசுரங்கள் தமிழ்ச்சங்கப் பிரசுரங்கள் சங்கக்கலாசாலை சங்கப்பரீக்ஷைகள் முதலியவைசம்பந்தமாக அனுப்பும் கடிதங்கள் மணியார்டர்கள் முதலியவற்றையும், இன்னும் இச்சங்கசம்பந்தமாயறியவிரும்பியெழுதும் பிறவற்றையும் மானேஜர், மதுரைத்தமிழ்ச்சங்கம், மதுரை என்று விலாசமிட்டும் அனுப்புமாறு இதன்மூலம் கேட்டுக்கொள்ளலாயிற்று.

மதுரைத்தமிழ்ச்சங்கம்,
மதுரை.

லக்ஷ்மீநாராயணையர்,
மானேஜர்.

---

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩௦] பிரஜோத்பத்தி௵ தை௴ [பகுதி-௩.
Vol. XXX. January February-1932. No. 3.

## கம்ப ராமாயண இன்கவித்திரட்டு.

[29-ம் தொகுதியின் ௪௧௪-ம் பக்கத் தொடர்ச்சி.]

### அரசியற் படலம்.

சுக்கிரீவன் முடிசூடி அரசாண்டதைக் கூறுவது.

சுக்கிரீவன் முடிசூடிவந்து வணங்க, இராமன் அவனுக்கு அரசநீதி போதித்தல்.

சூரியோதயமானபோது, இராமன் கட்டளைப்படி, இலக்குமணன் சுக்கிரீவனுக்கு முடிசூட்டினான். அரசனான சுக்கிரீவன், வந்து அடி படிய, இராமன், அவனுக்கு ஆசிகூறி, அரசநீதி போதிப்பானாய்ச் "சுக்கிரீவ! நீ கிட்கிந்தைக்குச் சென்று, அங்கதனை இளவரசனாகக் கொண்டு அரசுபுரிவாயாக. யாரும், உன்னை நெருங்காமலும் நீங்காமலும், இருக்கவேண்டியதூரத்தே யிருக்கச்செய்து, எல்லாரும் உன்னைத் தெய்வமென்று கருதும்படி உத்தமசீலமுடையனாய் ஒழுகுவாயாக, புகைதோன்றுமிடத்தே நெருப்புண்டென ஊகித்துணர்தல்போல, முகக்குறியால், அகப்பகையை அநுமானித்தறிந்து, நீ அறிந்ததைப் பகைஞர் அறியாவண்ணம் (உண்மை யன்பருக்குப்போல) அவருக்கும் அலர்ந்த முகமும் குளிர்ந்த மொழியும் உடையையாகுக. தீமையான செயல்களைச் சிந்தித்தலுஞ் செய்யாமல், வாய்மையே பேசிக், கொடுக்கத் தக்கார்க்குக் கொடுத்தற்கேற்ற பொருள்களைக் கொடுத்து, அயலார் பொருளுக்கு அணுவளவும் ஆசைப்படாயாக.

எளியரேன இகழ்ந்து எவரையும் இமிசியாதிருக்க எனல்.

497 "சிறியரென் றிகழ்ந்து நோவு செய்வன செய்யல். மற்றிந்
நெறியிகந் தியானோர் தீமை இழைத்தலால், உணர்ச்சி நீண்டு
குறியதாம் மேனி ஆய கூனியால், குவவுத் தோளாய்,
வெறியன எய்தி, நொய்தின் வெந்துயர்க் கடலில் வீழ்ந்தேன்".

இ-ள். "(ஆரையும்) அற்பரெனக் கருதி அலட்சியஞ்செய்து (அவருக்குத்) துன்பஞ்செய்வனவான காரியங்களைச் செய்யாதே. இந்த (அகிம்சை) நெறியை நான் கடந்து (என் பாலப்பருவத்தில் விளையாட்டாகத் தன் கூனல் முதுகில் வில்லுண்டை எய்து) துன்பஞ் செய்ததனால், (என்மீது கறுவுகொண்டு சலஞ்சாதிக்கத்தக்க சமயத்தை நெடுங்காலம் எதிர்பார்த்திருந்த) கூனி (செய்த சூழ்ச்சி)யினால் (எல்லாப் போகங்களையும் இனிது துய்க்கும் இராச்சியச் செல்வத்தை யிழந்து) வெறுமையை யடைந்து (உண்ணச் சோறும் உடுக்கத் துணியும் ஒதுங்கக் குடிசையுங் கிடையாத காட்டிலே காலந்தள்ளும்படியான) கொடுந் துன்பக் கடலிலே விழுந்தேன்.

நோவு செய்வன—துன்பஞ்செய்வனவான செயல்கள். இகழ்தல்—அவமதித்தல். செய்யல்—செய்யாதே ; எதிர்மறைஒருமை ஏவல் : செய்யாதொழிக என்றும் பொருள் கூறலாம். இப்பொருளில், எதிர்மறை வியங்கோள். இகத்தல்—கடத்தல். இழைத்தல்—செய்தல். 'உணர்ச்சி நீண்டு மேனி குறியதா(க) ஆ(கி)ய கூனி' என இயைக்க. குவவு—திரட்சி. வெறியன—வெறுமை (—இன்மை)யானவை—(கிரகம் இல்லாமை, வாகனம் இல்லாமை முதலிய) இல்லாமைகள். இல்லாமை, உடைமையின் எதிர்மறை. எல்லா உடைமைகளையும் இழந்து எல்லா இல்லாமைகளையும் எய்தினமை கூறினான்.

தோற்றத்தாற் சிறியரெல்லாம் உண்மையிற் சிறியரல்லர், 'உருவுகண் டெள்ளாமை வேண்டும்' என்ற கருத்துக்களை யுட்கொண்டு 'சிறியரென் றிகழ்ந்து நோவு செய்வன செய்யல்' என்றான். "உணர்ச்சி நீண்டு குறியதா மேனி ஆய கூனி" என்ற இனியினிய கூற்று, தன்மைநவிற்சி யணிக்குச் சிறந்ததோ ருதாரணமாயும் சமத்காரமாயு மிருப்பது சாலவும்

பாராட்டத்தக்கது. வலிய போரசர் பெரியசேனையோடு அரிய போர் செய்தாலும் அகற்றலாகாத அரசபதவியை எளிய பெண்ணொருத்தி வெகு லகுவாக விலக்கினுளென்பது கருதி 'நொய்தின்' என்றான்.

இப்பாட்டினோடு இதன்பின்வரும் (1) சிந்தாமணிப்பாட்டும் (2) நீதிநெறிவிளக்கப்பாட்டும் ஒருவாறு கருத்தொத்திருத்தல் காண்க :-

(1) அஞ்சனக் கோலி னாற்றா நாகமோ ரருவிக் குன்றிற்
குஞ்சரம் புலம்பி வீழக் கூர்நுதி யெயிற்றிற் கொல்லும்
பஞ்சியின் மெல்லி தேனும் பகைசிறி தென்ன வேண்டா
அஞ்சித்தற் காத்தல் வேண்டு மரும்பொரு ளாக, வென்றான்.

கோலின் ஆற்றா-கோலால் (அடித்தற்குப்) பற்றாத (மிகச்சிறிய).

(2) சிறிய பகையெனினும் ஓம்புதல் தேற்றார்
பெரிதும் பிழைபா டுடையார்-நிறைகயத்
தாழ்நீர் மடுவில் தவளை குதிப்பினும்
யானை நிழல்காண் பரிது.

## கார்காலம் கழிந்தபின் சேனையுடன் வருவாயாக வென்று இராமன் சுக்கிரீவனுக்குச் சொல்லுதல்.

"உன்னை உன் குடிகள் 'இவன் நம் அரசனல்லன், நம்மைப் பெற்று வளர்த்த தாய்' என் றெண்ணும்படி அவர்களை இனிது பேணிக் காப்பாயாக. அப்படி அன்போடு காக்குமிடத்தும் அவருள் எவரும் வரம்பு கடவாதிருக்கும்பொருட்டு எவர் தவறியற்றினும் அவரைத் தக்கவாறு தண்டிப்பாயாக" என்று கூறி "மாரிக்காலம் கழிந்தவுடன் உன் பெருஞ் சேனையோடு என்னிடம் வருவாயாக." என்றான்.

## இராமனைக் கிட்கிந்தையில் வசிக்கும்படி சுக்கிரீவன் வேண்டல்.

சுக்கிரீவன், "கிட்கிந்தைநகரம், குரங்குகள் உறையுமிடமென்ற குறையுடையதன்றி யாதொருகுறையும் இல்லாதது. அது, போகப் பொருள்கள் யாவற்றினையுமுடையதாய்ப் போகபூமி யென்னும் தேவ லோகத்தினும் சிறந்துவிளங்குவது. அங்கே, சிறிய அடியேங்கள் திருவடித்தொண்டுசெய்பச் சிறிதுகாலம் இனிது வீற்றிருத்தல் வேண்டும். உங்களை அடைந்து உங்களுக்குரியேமாகப்பெற்ற தமியேங்கள் உங்

களைப் பிரிந்துபோய் வாழும் வாழ்வு பெருவாழ்வானாலும் வெறுவாழ்வே யாகும். தேவியைத் தேடத்தக்க காலம் வருங்காறும் எங்களிருப்பிடம் சிறம்புறும்படி அங்கே எழுந்தருளி யிருந்தருளல்வேண்டும்'' என்றான்.

### இராமன் மறுத்தலும், சுக்கிரீவன் கிட்கிந்தைக் கேகலும்.

இராமன், குறுஞ்சிரிப்புக்கொண்டு "வேந்தர் இருக்கை விரதிகளுக் காகாது, யாங்கள் வந்தால் எங்களைப் போற்றலிலேயே உங்கள் பொழு தெல்லாம் போய்விடும். நீங்கள் இராசகாரியங்களைச் செய்தற்கு யாங்கள் இடையூறாயிருப்பேம். யான் உங்களுடனுறைந்தால், தேவி சிறை யிருந்து வருந்தாநிற்க, இராமன் இட்டர்களோடு இன்புற்று வாழ்ந்தா னென்ற தீப்பழி மூவுலகும் முடிவாங்காலத்தும் முடியாமல் நெடிதாகி நிலைத்துவிடும். நீ இப்போது அரசாட்சியை முறையாகச் செய்வாயாக. நாலுமாதமானபோது சேனையோடு நீ என்பால்வருதலே, யான் உன்பால் வேண்டுவது'' என்றான். சுக்கிரீவன், ஆண்டார்குறிப்பறிந்தொழுகல் அடியார்கடனென்றெண்ணி, மறுமொழிகூறாமல் வணங்கிச்சென்றான்.

### சுக்கிரீவன்பின் அங்கதன் செல்லல்.

இராமன், அங்கதனைநோக்கி "உன் சிறியதந்தையின்பின் செல். அவனை உன் பிதாவெனக் கருதி அவன்கருத்துக்கிசைந் தொழுகுவா யாக'' என, அவன் அடிபடிந்து சென்றான்.

### சுக்கிரீவன் அரசுசெய்தலுக்குத் துணைபுரிய, இராமன் அனுமானை அனுப்பல்.

பின்பு இராமன் அநுமானை நோக்கிச் "சுக்கிரீவன் அரசாட்சியை நன்கு நடத்துதற்கு வேண்டும் உதவியை உன் சிறந்த அறிவுகொண்டு செய்வாயாக'' என, அவன், மெய்யன்புமிகுதியாற் பிரியமாட்டாதவ னாய், "அடியேன் இங்கிருந்து தொண்டுசெய்ய அநுமதி அளித்தருள்க'' என, "அறிவு ஆண்மை முதலியன நிறைந்த ஒருவன் ஆண்ட அரசை மற்றொருவன் வலிதிற் பெற்றானானால், அவன் ஆளுகைக்குண்டாம் ஆபத்துகள் அனந்தமாம். அறிவும் ஆற்றலு மொருங்குடைய உன்

போல்வாரே அவ் ஆபத்துகள் நேராமல் காக்கவும் நேர்ந்தால் நீக்கவும் வல்லாராவர். ஆதலால், நீ, இப்போது, என் நண்பன் அரசைக் காக்கத் துணையாவாய். அப்பால், என் தேவியை மீட்க உதவுவாய். கிட்கிந்தைக்குச் செல்க" எனத், "திருவுள்ளப்படியே செய்வேன்" என்று போன்பொடு தொழுது பிரியாவிடை பெற்றுச் சென்றான். இராமன், அம்மலையினின் றகன்று சிசியமுககிரியை அடைந்து அங்கே வாழ்வானான்.

## சுக்கிரீவன் அரசுபுரிதல்.

கிட்கிந்தைக்குச் சென்ற சுக்கிரீவன், தாரையை வணங்கி ஆசி பெற்று, மந்திரி முதலியோர் இட்ட கட்டளை யியற்ற, அங்கதன் இளவரசுபுரியத், தன் ஆணை 'சுக்கிரீவாக்கினை' எனப் பிரசித்திபெற்று எங்குஞ் செல்ல, இனிதாக அரசாண்டிருந்தான்.

அரசியற்படலம் முற்றிற்று.

[தொடரும்.]

வெ. ப. சுப்பிரமணியமுதலியார்.

---

# பரிசோதனத்தொடர்.

—(o)—

செந்தமிழ் 28-ம் தொகுதியின் 10-ம் பகுதியில் ௪௪௩-ம் பக்கம் முதல் ௪௪௮-ம் பக்கம் வரை பரிசோதனத்தோடர் என மகுடமிட்டுச் சேனாவரையத்திற்கண்ட சில தொடர்களிலுள்ள பிழைகளைத் திருத்திய வியாசமொன்றை வெளிவரச்செய்தனன்.

அத்தொடர்களின் றிருத்தங்களுள் பின்னுள்ளவற்றை யங்கீகரித்து முன்னுள்ள வொருதொடரின் திருத்தத்தை யங்கீகரியாது முன்னிருந்தபடியே யிருக்கலாமென யாழ்ப்பாணம் சி. கணேசையரவர்கள் செந்தமிழ் 28-ம் தொகுதியின் 11-ம் பகுதியில் ௪௮௯-ம் பக்கம் முதல் ௪௯0-ம் பக்கம் வரை ஓர் கட்டுரையெழுதிப் பரிசோதனத் தோடர் எனவே மகுடமிட்டு வெளிவரச்செய்துள்ளார்கள்.

யான் சில அசௌகரியத்தால் அவ்வமயத்தில் அப்பத்திரிகையைப் படிக்கவில்லை. இப்பொழுது படிக்கும்போது அக்கட்டுரையையும் படித்தறியலாயினன்.

அதனைப் படித்துவருங்கால் 'பகுப்பப் பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைத்தலான் அதனின் வேறுயினுற்போல' என இருத்தலே யமையுமென யான் திருத்திய திருத்தத்தில் 'பகுப்ப' என்பது நின்று வற்றுவதாகக் கருதியே ஐயரவர்கள் அத்திருத்தத்தை யங்கீகரியாது, முன்னிருந்த தொடரையே பிழையற்றதெனத் தாபிக்கப்புகுந்தார்களென்பது தெரிகின்றது.

சேனாவரையத்திலுள்ள அத்தொடராவது:— "செயற்கென்னும் வினையெச்சம் உருபேற்ற தொழிற்பெயரோடு ஒப்புமையுடைத்தாயினும் உருபும் பெயரு மோன்றுகாது பகுப்பப் பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைத்தலான் அதனின் வேறுயினுற்போல" என்னு மிஃதே.

உருபும் பெயரும் ஒன்றுகாது பகுப்பப் பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைப்பது, வினையெச்சமாமென்பது இத்தொடராற் புலப்படுகின்றது. உருபும் பெயரும் ஒன்றுகாமையும் ஒன்றுபடுதலும் ஒரு தன்மியின்கணிராவாகலான் 'உருபும் பெயரு மோன்றுகாது' என்பது

சேனுவரையரா லெழுதப்பட்டதன்று; 'பகுப்பப் பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைத்தலான் அதனின் வேறுயினுற்போல' என்பதுதான் அவரால் எழுதப்பட்டதாகும் என்பதே யான் எழுதியவற்றின் சாரமாகும்.

உருபும் பெயரும் ஒன்றுகாமல் பிளவுபட்டிசைப்பது, உருபேற்றதொழிற்பெயர். அங்ஙனமின்றி ஒன்றுபட்டிசைப்பது, வினையெச்சம். இவ் விரண்டன்றன்மமும் ஒருங்குபெறப்பட் டினிதுவிளங்க 'உருபும் பெயரும் ஒன்றுகாது........ஒன்றுபட்டிசைத்தலா னதனின் வேறுயினுற்போல' என எழுதியுள்ளார். ஆதலால் அது மாசற்றதொடர்தான் என்பது அவர்கள் கட்டுரையின் சாரமாகும்.

குறித்த தொடருக்கு இரண்டுபடியாகப் பொருள்கண்டு வலியுறுத்தியுள்ளார்கள். அவை, உருபும் பெயரும்-வேற்றுமையுருபும் தொழிற்பெயரும், ஒன்றுகாது-ஒன்றுபட்டிசையாமல், பகுப்ப-பிரிய, பிளவுபட்டிசையாது-பக்கிசையாமல், ஒன்றுபட்டிசைத்தலான்-சேர்ந்திசைத்தலான். என்பதும், (அஃது) உருபும் பெயரும் ஒன்றுகாது பிரிய (தான்) அது போலப் பிளவுபட்டிசைபாது ஒன்றுபட்டிசைத்தலான். என்பதும் ஆகும்.

முன்னுரையை நோக்கின் (உருபும் பெயரும்) ஒன்றுகாமையும், பிரிதலும், பிளவுபடலும் பக்கிசைத்தலாகிய ஒரேபொருளாக ஈண்டுப் புலப்படலான், அவ்வொருபொருளையுணர்த்த அவற்றுள் (அம் மூச்சொல்லுள்) ஒருசொற் போதுமே? பலசொற்கள் வேண்டாவே? உடன்பாட்டு முகத்தானும் எதிர்மறைமுகத்தானு முணர்த்தினுரெனினும் ஒன்றுகாது பிளவுபட்டிசையாது என்னுஞ் சொற்களே போதும். என்னை? இவையே ஒன்றுபட்டிசைத்தலான் என்பதற் கடையாய்நின்று பக்கிசைத்தலாகிய உருபேற்ற தொழிற்பெயரின் தன்மத்தையும் பக்கிசையாமையாகிய வினையெச்சத்தின் றன்மத்தையும் இனிது விளக்குமாதலான் என்க. ஆதலால் 'பகுப்ப' என்பது மிகைபட்டுநின்று பயனின்றுகின்றதே? என வினவுமாறு நிகழ்கின்றது.

பின்னுரையை நோக்கின் அஃது பொருத்தமுடையதாகத்தோன்றினும், அங்கும் 'பகுப்ப' என்பது நின்று வாதஜேபுரிதலால் அவ்வுரையும் பிழையற்றதாக நிகழவில்லை. என்னை? பகுப்ப என்பது 'உகுப்பு'

என்பது முதலியபோலப் பிறவினைச்சொல்லாமன்றித் தன்வினைச்சொல்லாதவில்லை. ஆதலாற் பிறவினைச்சொல்லாகிய இதனைத் தன்வினைப் பொருளைத் தருவதாகக்கொண்டுள்ளமையா னென்க.

ஆகையால் அவர்கள் முன்னிருந்தபடியே யிருக்கலாமெனக்கூறிய கொள்கையை யங்கிகரிக்க முடியவில்லை.

பகுப்ப என்பது ஒரோவிடங்களில் தன்வினைச்சொல்லாய்நிற்குமெனின் பிரமாணமென்னை?

அன்றியும், இஃது செய்யுளன்றாதலால் பகுப்பவென்பதைப் பெய்து மயக்கக்கூறாது பக வென்னுஞ் சொற்பெய்து விளங்கக்கூறியிருப்ப ரென்க. செய்யுளாயின் அடி தொடை முதலிய நோக்கிக் கூறியிருப்ப ரென்னலாம்.

விளங்க வுரைவரைந்துசெல்லும் சேனவரையர் இங்ஙனம் மயங்க வுரைவரையார் எனல் மாறுபடாத கூற்றாகும்.

அங்ஙனமாயின் நுந்திருத்தத்திலும் 'பகுப்ப' என்பது நின்று வற்றுகின்றதெனின் செயற்கென்னும் வினையெச்சமும் உருபேற்ற தொழிற்பெயரும் வடிவால் ஒன்றுபோலத்தோன்றினும் வினையெச்சமானது தொழிற்பெயரினின்றும் பிரித்தறியுமாறு பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைக்கும். அங்ஙனமிசைத்தலான் எனப் பொருள்கொள்ளின் பகுப்ப என்பது நின்றுவற்றுத லெங்ஙனமென்க. (பகுப்ப— பிரித்தறிய).

ஆதலால், செயற்கென்னும் வினையெச்சம் உருபேற்ற தொழிற்பெயரோடு ஒப்புமையுடைத்தாயினும் பகுப்பப் பிளவுபட்டிசையாது ஒன்றுபட்டிசைத்தலான் அதனின் வேறாயினாற்போல என விருத்தலே யமையுமெனக் கொள்ளுமாறு யான் முன்னெழுதியது மாசற்றதாமென வுன்னுகின்றனன்,

இங்ஙனம்,

பண்டித. சித. நாராயணசுவாமி.

---

# யவனமஞ்சரி.

[ஒழுக்க நூல்.]

[சஅ-ம் பக்கத் தொடர்ச்சி.]

## 8-ம் அதிகாரம். சந்தோஷம்.

ஆராய்ச்சிக் குட்பட்டபொருள் எவற்றையும் வரைவிலக்கணமூல மாக நாம் ஆராயவேண்டும். ஒரு பந்தய ஓட்டத்தில் தொடக்கம் முக்கிய மானது. நல்ல பிரமாணங்களை ஒரு சாஸ்திரத்துக்கு ஆதாரமாகப் பெற்றுக்கொண்டபின் சாஸ்திரத்தை இலகுவாய் ஆராயலாம். இம்மதம் பிறர்மதத்துடன் ஒத்திருக்கின்றது. நன்மைகளை, புறப்பொருள் நன்மை, புலன்களதுநன்மை, ஆன்மாவினதுநன்மை யென மூவகை யாக நாம் வகுப்போம். சத்திகளாற் பெறப்படும் நன்மை ஆன்மநன்மை யாதலால் மற்றையநன்மைகளிலும் அது சிறந்தது.

இனிச் சந்தோஷவாழ்க்கையென்பது என்ன? சிலர் சந்தோஷத்தை நற்குணமென்பர்; சிலர் ஞானமென்பர்; வேறுசிலர் நற்குணத்தினது ஞானத்தினது தொகுதியென்பர்; மற்றுஞ் சிலர் இன்பத்தைச் சந்தோ ஷத்தின் சொரூப இலக்கணங்களில் ஒன்றென மொழிவர்; சிற்சிலர் இன்பத்துடன் செல்வமும், தேகசுகமும் சந்தோஷமென்பர். இவற்றுள் ஒருசாரார் அநுபவமுடைய வயோதிகர், மற்றொருசாரார் சாஸ்திர ஆசிரியர்கள்; ஆகையா லிருவர்கூற்றையும் ஆப்தவாக்கியம்போல மதிப் பேம். இனி நற்குணமுடையனாயி ருப்பதற்கும், நற்செயல் செய்வதற் கும் வேறுபாடுண்டாகலான் சந்தோஷமென்பது நற்குணமோ நற் செயலோவென ஐயப்படுவேம். ஒருபழக்கத்திற்கும் பயிற்சிப்பட்ட சத்திக்கும், தத்துவப்பயிற்சிக்கும் மிகப் பேதமுண்டாகையால் இம் மூன்றனுள் சந்தோஷமெது? ஒருவன் நல்லவனுயினும் நித்திரைசெய்து காலத்தைக் கழிக்கக்கூடும், பயிற்சிசெய்தால் நன்மை பிறக்குமாகலான் சந்தோஷம் ஒரு பயிற்சி எனப்படும். ஒலிம்பிக் என்னும் வருஷாந்த விளையாட்டில் தைரியசாலிகளெல்லாரும் பரிசுபெறுவதில்லை. பந்த யத்திற் சேர்ந்து அதிற் றிறமைகாட்டி முதன்மையடைந்தவர்க்கே பரிசு அளிக்கப்படும். நல்லவன்வாழ்க்கை நல்லதாகவேயிருக்கும். அவன்

நல்வாழ்க்கையில் இயல்பாகவே இன்புறுவன். ஒவ்வொருவரும் தத்தம் இச்சைகளில் இன்புறுதல் காண்கிறோமல்லவா. குதிரையேற்றத்தில் விருப்பமுடையோர் குதிரைகளிலும், காட்சிகளில் விருப்பமுடையவர் காட்சிகளிலும், நீதியில் விருப்பமுடையவர் நீதிகளிலும் வேட்கையுடையராயிருப்பர். இன்பங்கள் ஒன்றற்கொன்று மாறுகோளாயினும் நற்செயலில் இன்பம் விழைபவனுக்கு இன்பங்கள் ஒன்றற்கொன்று மாறுபாடின்றியிருக்கும். நற்செயலென்பது இன்பம் விளைப்பது. நல்லோர் இன்பமயமாக இருப்பாராகலின் அவர்க்கு இன்பக்குறைவு குறைவன்று. ஆகையால், நன்மகன் ஒருவன் நற்செயலில் இன்புறானாகின் அவன் நல்லவன் அல்லன். தாளாண்மை யென்னும் நற்பழக்கமுடையவன் அத்தன்மையால் எச்செயலையும் செய்யவேண்டும். நற்குணம் நற்செயலிலே விளங்கி நற்குணம் பொருந்தியவனுக்கும் இன்பம் விளைக்கும்.

சந்தோஷமென்பது நன்மையையும் இன்பத்தையும் ஒருங்கு விளைக்கும் குணமென மொழிவேம். ஈண்டு டேலியன் கல்வெட்டை உற்றுநோக்குக. "நற்செயல் நீதியானது; தேகசௌக்கியம் மிகவும் பெரிய நன்மை; மனம் இச்சித்ததைப் பெறுவது இன்பம். இஃதெல்லாம் திரண்டு சேர்ந்த ஒரு தத்துவத்தைப் பயிற்சி செய்வதே சந்தோஷம்." ஆயினும் சந்தோஷத்திற்கு ஐசுவரியம் போன்ற நன்மைகளும் அத்தியாவசியம். பொருளில்லாதோன் யாங்ஙனம் சந்தோஷமுள்ளவனாயிருத்தல் கூடும்? மேலும் அரசருதவி குடிப்பிறப்பு மக்கட்பேறு, அழகு, கேண்மை முதலியன இல்லாதவர் சந்தோஷமாயிருப்பது அரிதினுமரிது. ஆனதுபற்றிச் சிலர் சந்தோஷத்தையும் செல்வத்தையும் ஒருபொருட்கிளவியென்பர்.

### 9-ம் அதிகாரம், சந்தோஷம் ஒரு முயற்சி.

இங்ஙனமாயின் சந்தோஷம் கல்வியாற் பெறற்பாலதோ? நற்பழக்கத்தாற் பெறற்பாலதோ? அல்லது வேறு பயிற்சியாற் பெற பாலதோ? என ஐயுறுவோம். அற்றேல், தெய்விகமாய்த் தற்செயலா வருவதோ? புராதன் னமைகளினும் சந்தோஷம் பெரியதெனக் கடவு கொடுப்பாராயின் சந்தோஷம், ஒரு கொடையாகும். கொடை இ வாராய்ச்சிக்கு உரித்தன்று. இதுநிற்க. சந்தோஷம் கல்வியின் காரிய யிருப்பினும், பயிற்சியின் காரியமாயிருப்பினும் அது கடவுளின் ஆ

வாதம். இதைப் பெறுவதற்கு எல்லாரும் ஊக்கத்துடன் முயற்சிக்க வேண்டும். கலைஞானங்களிலும் இயற்கைச் சாஸ்திரங்களிலும் பொருள்கள் காரண காரியத் தொடர்புபற்றியே முறைவகுக்கப்பட்டிருத்தலால் சந்தோஷமும் ஒரு காரணத்தின் காரியம். இதைத் தற்செயலாய்வருவதென்பது குற்றம். அற்றேல் எங்கள் வரைவிலக்கணத்தின்படியும் சந்தோஷமென்பது ஆன்மசிற்சத்திகளை ஒழுங்குபடுத்திப் பயிற்சிபண்ணிய பொழுது தோற்றும் நிலையாகையால் அது தற்செயலாகவும் அநிர்வசனமாகவும் தோற்றுது. இக்பமும், நன்மையும் சந்தோஷத்தைப் பெருக்கும் துணைக்காரணமென்பதை அறிக.

முன்னர்க் கூறியவாறு சந்தோஷ ஆராய்ச்சி ஒரு அரசியல் ஆராய்ச்சிபோல்வதாகும். அதன் நோக்கம் நன்மக்களைப் பழக்குவதாகும். அரசியலாராய்ச்சி செய்வார் சனசமூக விஷயங்களை உணரமாட்டாத ஆடு மாடு குதிரைகள் முதலிய விலங்குகள் சந்தோஷமாயிருக்கும் ஆற்றலுடையன எனக் கூறுர். இளம்பிராயத்தில் எது மகா நோக்கமென அறியாராகலாற் குழந்தைகள் சந்தோஷமாயிருப்பரென்பது உபசாரமொழியே; உண்மையன்று சந்தோஷம் குணமாத்திரையன்று. அது நீடித்த காலமும் வேண்டிநிற்கும். காலவயத்தால் சந்தோஷநிலையில் இருப்பவர் நிலைமாறி இன்புறுவதுமுண்டு. செல்வன் வறியனுவதும் இயற்கை. உரோசர் வரலாற்றில் பிறையம் என்னும் வேந்தன் ஐசுவரியமும், புத்திரப்பேறும், மற்றும் செல்வங்களுமெல்லாம் உடையனுயிருந்தும் இறுதிக்காலத்தில் உரோசர் யுத்தமுடிவில் அவன் ஊரையுமிழந்து, மக்களையுமிழந்து தானும் மடிந்தான். (உரோசாது இதிகாசம் கிரேக்க உரோச யுத்தத்தின் வரலாற்றைக் கூறும்).

## 10-ம் அதிகாரம். சந்தோஷம் நித்தம்.

இஃது இவ்வனமாயின் கிரேக்கநாட்டுப் புத்திமான்கள் எழுவரில் ஒருவராகிய சோலன் சாற்றியவாறு மரணகாலம்வரையும் ஒருவரையும் சந்தோஷமாயிருக்கிருரென அறிதல் இயலாததோ? இறந்தபின் எங்ஙனம் சந்தோஷமாயிருக்கமுடியும்? சந்தோஷமென்பது ஒருவகை முயற்சியென நாம் மொழிந்தோமாயின் எவ்வாறு இறந்தவன் சந்தோஷிப்பது? இறந்தபின் ஒருவரைச் சந்தோஷமாயிருந்தாரெனக்கூறுதல் சோலனது கருத்தாயின் அப்போதும் அம்மனிதனுக்குச் சந்தோஷத்

திற் குறைவுண்டு. யாங்ஙனமெனிற் கூறுதும். இறந்தவர்க்குச் செய்யும் மரியாதை செய்யாது விடப்படினும் இறந்தவரது சந்ததியார் துன்ப மனுபவித்தாலும் முழுச்சந்தோஷத்துக்குக் குறைவு ஏற்படும். சந்தோஷமாய் வாழ்ந்து இறந்தவர் இவ்வாறு இன்ப துன்பங்களில் துணுக்குறுதல் விநோதம். சோலன் சொல்வது என்னையோவெனின் ஒருவர் மாணகாலப்வரையும் காத்திருந்து அவர் சீவியமுழுதும் சந்தோஷமா யிருந்தால் அவரைச் சந்தோஷசீவியஞ்செய்தவர் எனலாம் என்பதே. உயிருடனிருக்கும்போதே சந்தோஷமாயிருப்பவனைச் சந்தோஷமுடையவனெனக் கூறாது விடுதல் விநோதம். சந்தோஷம் காலவயத்ததாயின் ஓணான் நிறம்மாறுவதுபோல மக்களது சந்தோஷமும் துன்பமாய் மாறும். காலத்திற் றங்கியிருப்பினும் சந்தோஷம் காலத்தின் காரிய மன்று. சந்தோஷம் ஒரு தத்துவமுயற்சி யென்பதை யறிமின். இம் முயற்சி புறநீங்கலாக மற்றும் முயற்சிகளொன்றும் நித்தமல்ல. சாஸ்திரங்கள் அழிபொருள்கள். அவற்றினும் மேன்மையாகிய இந்த மகா நோக்க ஆராய்ச்சியே நித்தம். இனிக் காலம் பெருநன்மைகளையும் சிறுநன்மைகளையும் கொடுப்பது. சிறுநன்மைகள் கவனிக்கப்படுவனவல்ல. பெருநன்மைகள் தீச்செயலாயின் அவை பெருங்கேடு விளைக்கும். ஆனால் நல்லவன் என்ன இடையூறு எதிர்ப்படினும் யாது ஏற்றதோ அதையே செய்து மேம்படுவன். கிடைத்த தோலில் திறமான செருப்பைக் கட்டுவதே கெட்டித்தனம். இனிச் சந்தோஷமுடையவன் பெருநன்மை விளைந்துழி இன்புற்றும், பெருங்கேடு விளைந்துழித் துன்புற்றும் துணுக்குறாது நிற்பன். சந்தோஷமாயிருப்பதற்கு நீடித்தகாலம், செல்வம், புறநன்மைகள் முதலியன வேண்டப்படுமாயின் சந்தோஷமுடையவரைச் சுட்டியறிவது அரிது. எதிர்காலத்தைப்பற்றி ஒன்றும் தெரியாமையால் இறந்தகால நிகழ்கால நன்மைகளை நோக்கி ஒருவனைச் சந்தோஷமுடையானெனக் கூறுவோம்.

### 11-ம் அதிகாரம். சந்தோஷம் நித்தம்.

சந்ததியாரின் சுக துக்கங்கள் இறந்தோரின் சந்தோஷத்தைக் குறைத்தலும், கூட்டலும் செய்யமாட்டா என உலகத்தாரால் ஒத்துக் கொள்ளப்பட்டது. அச் சுக துக்கங்களை ஆராய்வது விரியுமாகலின் யாம் அவற்றை விடுகின்றாம். சிநேகரின் சுக துக்கம் இன்பத்தை

முறையே கூட்டலும், குறைத்தலும் செய்வன. எவ்வாறு குறைத்துக் கூட்டினும் சந்ததியாரின் சுக துக்கங்கள் இறந்தவரின் சந்தோஷ நிலையை மாற்றமாட்டா. இப்படியே சிநேகிதரின் இன்ப துன்பமும் இறந்தோரது நிலையை மாற்று.

## 12-ம் அதிகாரம். சந்தோஷநிலை.

சந்தோஷம் நம்மாற் புகழப்படும்பொருள்களி லொன்றோ? பய பத்தியுடன் வணங்கப்பட்டு வேண்டப்படும் பொருள்களிலொன்றோ? சந்தோஷம் ஒரு மெய்ப்பொருளாய் உலகநன்மையாய் இருப்பது. ஒரு குணம் அதன் தொடர்புநோக்கியே புகழப்படுவது. நீதி, வீரம் முதலிய நற்குணங்களை நாம் பாராட்டுவது அவற்றின் நற்செயலின்பொருட்டே யாம். ஓட்டத்தில் வல்லுநரை அவரது ஆற்றலுக்காகவே நாம் புகழ் கிறோம். வீரச்செயல்செய்யும்போது அக்குணம்நோக்கியே தேவர்களைப் போற்றுவோம். இவ்வாறு தேவர்களை மனிதருடன் ஒப்பிட்டு நகை யாடற்பொருளாக்கிவிடுகிறோம். எப்பொருளைப் போற்றுகிறோமோ அப்பொருளின் குற்றம் குறை நோக்கி வேறொருபொருளுடன் ஒப்பிட்டே போற்றுவோம். தேவர் சந்தோஷநிலையிலும் போற்றத்தக்க ஆசீர்வதிக்கப்பட்டநிலையில் இருப்பர். நீதியைப் புகழ்வதுபோலச் சந்தோஷத்தை நாம் புகழேம். சந்தோஷம் ஆசீர்வதிக்கப்பட்டநிலையாத லால் அது புகழப்படாதது. இது காரணம்பற்றி யுடோச்சஸ் என்ப வர் இன்பம் நன்மையாயிருந்தும் அதைப் புகழ்வாரின்மையால் இன்பம் புகழ்பொருளினும் மேன்மையுடைத்தென்றார். இதுகாறும் நம்மால் ஆராயப்பட்டவற்றின் முடிபு, யாது வியக்கத்தக்கதாய் எல்லாநன்மைக ளுக்கும் ஆதாரமாயிருப்பதோ அது வணங்கற்பாலது. சந்தோஷம் போற்றப்படும் ஒரு நன்மை. இது எம் ஆராய்ச்சியில் ஒரு ஆதாரமான பிரமாணம்.

## 13-ம் அதிகாரம். மனம்.

சந்தோஷமென்பதை யாராய்வதும் அதன் அவினாபாவமாகிய ஆன்ம சிற்சத்தியின் முயற்சி என்ன என்பதை யாராய்வது மொன்றே. அமைச்சர் நோக்கமும் பிரசைகளை நல்வழிப்படுத்துவதே. இவ்வாராய்ச்சி யும் ஒரு அரசியலாராய்ச்சிபோல்வதால் மனிதனின் நற்பயிற்சிஎன்ன?

நாம் அதைத் தெளிவாக விளங்குவதற்கு ஸ்பாட்டா கிறீஸ் முதலிய தேசத்துப் பிரமாணங்களைக் கற்றல்வேண்டும். சந்தோஷம் ஆன்மாவினது முயற்சியாகலான் உடம்பினது நன்மையை ஆராய்வதால் நன்மையில்லை. வைத்தியனுக்கு உடம்பினது அவயவங்களின் தொழில்கள் தெரிவதுபோல இவ்வாராய்ச்சியை எத்தனிப்போர்க்கு ஆன்மாவின் குணம், தொழில் முதலியன தெரியவேண்டும்.

இப்போது இவ்வாராய்ச்சிக்கு உரியஅளவு ஆன்மாவி னியற்கையை ஆராய்வோம். வேறு நூல்களில் ஆன்மாவைப்பற்றிக் குறித்துளாம். அவற்றை இங்கே கொள்வோம். ஆன்மா இருவகைச் சத்தியுடைத்து. நியாயத்தைப்பற்றிநின்று-சுத்தபுத்தியாய்நின்று விளங்கும் சக்தி பகுத்தறிவெனப்படும். மனப்போக்கின்வழியொழுகி யோகத்தைப்பற்றிநில்லாத அசுத்தபுத்தி பகுத்தறிவில்லாப்பகுதி எனப்படும். இவ்விருவகைப் பகுதியும் உடம்பி னவயவங்கள்போல வெவ்வேறாக இருப்பவாயினும் அல்லது புத்தியில்மாத்திரம் பிரிந்திருப்பதுபோல் தோன்றி வட்டத்தின் உள்வளைவு புறவளைவு இருதிறப்படினும் ஒன்றேயாயிருப்பது போல உண்மையில் இவ்விருபகுதியும் ஒன்றேயாயினு மாகுக. ஒன்றோ பலவோ என்னு மாசங்கைபற்றி மலையற்க.

இனிப் பகுத்தறிவில்லாப்பகுதி இருவகைப்படும். ஒருபகுதி, புல், மரம், மிருகம் மனிதன் முதலியவற்றிற்குப் பொதுவாயுள்ள வளருந்தன்மையைச் செய்யுஞ் சக்தி. இது பசியைத் தோற்றுவிப்பதும் ஊணைச் சீரணிக்கச்செய்வதுமாகிய ஒருவகைக் கன்மசக்தி. இது மனிதனின் சிறப்புச்சக்தியன்று. நித்திரையிலும் இச்சக்தி தொழிற்பட்டுக்கொண்டேயிருக்கும். இச்செயல்பற்றி நாம் ஒருவனை நல்லவன் தீயவனென்பது முறையன்று. இதுகாரணம்பற்றியே இன்பவாழ்க்கைக்கும், துன்பவாழ்க்கைக்கும், சீவியகாலத்தில் அரைப்பகுதியில் பேதமுண்டன்றென்பது. நித்திரையின் எதிர்மறையிலக்கணம்வருமாறு: நன்மை தீமை செய்யுஞ் சக்தி தொழில்செய்யாமற் செயலற்றிருக்கும் கேவலநிலை. இவ்வவத்தையிற் கனவுமாத்திரம் தோன்றி நல்லார்க்கு இன்பமாயும் தீயார்க்குத் துன்பமாயும் நிகழும். இச்சக்தி மனித நற்குணத்துடன் நெருங்கிய தொடர்பில்லாததாகலான் இதன் ஆராய்ச்சி இத்துடன் நிறுத்தப்பட்டது.

இப்பகுத்தறிவில்லாப் பகுதியின் மற்ற அங்கம் ஒருவழி புத்தி வழிநின்றும் ஒருவழி அதற்கு அமையாமலும் தொழிற்படும். அதை மெய்ப்பாடென்பேம். மோகங்களில் மூழ்கின அடக்கமில்லாரை இச்சக்தி சிற்சிலநேரத்திற் புலன்வழிச்செலுத்தியும் மற்றும் சிலவேளைகளில் இதற்கு மாறான புத்தியின் ஆஞ்ஞைப்படி நிறுத்தியும் மக்களைத் துணுக்குறுத்தும். வாதத்தாற் சோம்பின அவயவம் கன்மசக்தியின்றி இச்சாசக்தியின் கட்டளைக்கு எதிராகத் தொழிற்படுவதுபோல ஆன்மாவின் ஆணைக்கு மாறாய் இப்பகுத்தறிவில்லாப்பகுதி தொழிற்படும். உடம்பினது அவயவம் ஆன்மாவின் ஏவலுக்கு அமையாது மீறிநடப்பதை நாம் காணலாம். ஆனால் ஆன்மாவின் அந்தக்காணம் போன்ற இப்பகுத்தறிவில்லாப்பகுதி ஆன்மாவின் கட்டளையை மீறிநடப்பதை நாம் ஊனக்கண்ணாற் காணோம். நடுநிலைமைவிரும்பும் மனிதரில் இப்பகுத்தறிவில்லாப்பகுதி தகப்பனது ஏவற்படி மகன் ஒழுகுவதுபோலப் புத்தியின்கட்டளைக்குக் கீழ்ப்படியும்.

இனிப் பகுத்தறிவுச்சக்தியும் சுத்தபுத்தி எனவும் அசுத்தபுத்தியின் ஏவல்வழியொழுகும் அசுத்தபுத்தி எனவும் இருவகைப்படும். நற்செயலைச் செய்யும் சக்தி இச்சக்தியே. நற்குணம், ஞானம், விவேகம் (Prudence) முதலியவை இச்சக்தியின் காரியங்கள். ஒருவனை நல்லவனென நிச்சயிப்பதற்கு அவன் புத்திநுட்பத்தை நாம் ஆராய்வதில்லை. அவன் நடுவுநிலையையே ஆராய்வோம்.

---

## இரண்டாம் பாகம்.

## அறங்கள்.

### முதல் அதிகாரம். அறம் ஒரு பயிற்சி.

முதற்பாகத்தில் ஆன்மசத்தியை இருவகைப்படுத்திய முறையே ஆன்மாவின் செயல்களையும் இருவகையாகப் பிரித்து, மேன்மையென்பது புத்திமேன்மை ஒழுக்கமேன்மையெனக் கூறுவோம். இவ்விரண்டாம்பாகத்தில் நாம் ஒழுக்கமேன்மையை ஆராய்வோம். புத்திமேன்மை கல்வியாய் ஆசிரியரது கற்பித்தலான் விளைவதால் காலமும்

அநுபவமும் வேண்டிநிற்கும். ஒழுக்கமேன்மை பயிற்சியின் காரியம் என்பது அறிக. ஒழுக்கமேன்மை இயற்கையாய் ஒவ்வொரு மகனிடத்தும் அமைந்துள்ளதாயின், அதைப் பயிற்சியால் ஆக்கமுடியாது. கல்லையெறிந்தால் கீழே விழுவதன்றி அது மேலே செல்லாது. தீயைக் கீழ்நோக்கச் செய்ய இயலாது. நல்லொழுக்கம் இயற்கையுமன்று; செயற்கையுமன்று. இயற்கையாயநற்குணம் பழக்கமுறையால் சன்மார்க்கமாகும். இயற்கைத்தொழில் எவற்றிற்கும் சத்தி உண்டு; புலன்போல. காண்டல்செய்வதால், கண்ணிந்திரியம் உண்டாவதன்று. கண்ணிந்திரியம் என்னும் சத்தியுடைமையால், அதைப் பயிற்சிசெய்து பயன் அடைகிறோம். கலைஞானம் பயிற்சியால் உண்டாவதுபோல, நல்லொழுக்கமும் பழக்கத்தால் உண்டாகும். சிற்பாசாரி சிற்பத்தில் வல்லுநனாவதுபோல, நன்மைசெய்து பழகியவன் நல்லவனாயன். அரசரும் பயிற்சிமுறைகளால் குடிகளை நன்மக்களாக்குவர். அநுபவத்திற் சித்தியடைந்த அரசியல்முறையை நல்லரசியல்முறை என்பேன். நல்லொழுக்கத்திற்கும் தீயொழுக்கத்திற்கும் பழக்கமே காரணம். மக்கள் நல்லவராவதும் தீயவராவதும் ஆசிரியரது பயிற்சியானன்றி, இயற்கையாலாயின் எல்லாமனிதரும் நன்மக்களாகவே பிறந்து நன்மக்களாகவே வாழ்வர். இஃதுண்மையாயின் தீயராய்ப்பிறந்தோரைத் திருத்தமுயல்வது பேதைமை. சனசமூகத்தில் ஒழுக்கத்தின் குறை குற்றம் நோக்கி, இது இதம், இது அகிதம்; இது நன்மார்க்கம், இது துன்மார்க்கம் என நிச்சயிப்பேம். இவ்வாழ்க்கையில் இடையூறு விளையுந் தருணங்களில் பழகிய பழக்கத்தால் யாம் மனவலிமை உடையராவேம். செல்லிடம் கவனியாமல் வெகுளியை விருத்திபண்ணுவார் அதற்கு அடிமையாவார். ஒருவனது குணம் ஒருவனது செயலால் மாறுதலடையுமாகையால், இளவயசிலேயே நற்பழக்கத்தை ஒருவன் பழகவேண்டும்.

### உ-ம் அதிகாரம். நற்செயல்.

நாம் நன்மக்களாவதற்கு ஒழுக்கநூலாராய்ச்சி செய்வதன்றி, நல்லொழுக்கத்தின் இலக்கணத்தை அறிவதற்காக ஆராய்ச்சி செய்வோம். நற்செயல் நீதிச்செயலாய்ப் பகுத்தறிவுத் தத்துவத்திலிருந்து தோன்றல் வேண்டும். பகுத்தறிவின்தன்மையைப் பின்னர் ஆராய்வாம். செயல்களை நமது அநுபவத்தால் ஆராய்ந்து அவற்றின் தன்மை நோக்கி

வகுப்போம். ஒவ்வொரு செயலையும் விசேடச்செயலாக எடுத்தாராய்ந்து நிச்சயிப்போம். சாஸ்திரப்பிரமாணங்களைத் தீவிரதமமாய் நிச்சயிப்பதுபோல ஒழுக்கத்தை நல்லது தீயதென இலகுவாய் முறைப்படுத்த இயலாது. ஓரளவு நுட்பத்துடன் செயலை நன்மை தீமையென நிச்சயிப்போம். தேகாப்பியாசம் செய்யாவிடினும் கேடுவிளையும்; அதிகமாய்ச்செய்தாலும் கெடுதியாகும். உணவு மிகினுங் குறையினும் நோய்செய்யும். வீரம் முதலிய அறங்களும் இத்தகையனவே. எவற்றிற்கும் அஞ்சுவது கோழைத்தன்மை; ஒன்றற்கும் அஞ்சாதிருத்தல் மூர்க்கம். மூர்க்கம் ஒருவகைப் பேதைமை. அஞ்சுவதற் கஞ்சித் துணியவேண்டியதற்குத் துணிதல் வீரம். இன்பங்களிற் சற்றும் இன்புறாதானை மெய்ப்பாடு இல்லாதவன் என்போம். இத்தகைய சுவையுணர்ச்சி இல்லாதாரை நாம் உலகில் காண்பது அரிது.

### 3-ம் அதிகாரம். அறச்செயல் இன்பம்விளைப்பது.

இன்பமாயினும் துன்பமாயினும் நிகழும்போது, அந்நிகழ்ச்சி ஒருவன் ஒழுக்கத்தையும் குணநலத்தையும் சாட்சிமாத்திரையாய்நின்று காட்டும். ஐம்புலவின்பத்தை வெறுத்தானை ஒழுக்கமுடையவன் என்பர். இன்பங்களை வெறுக்கவேண்டியகாலங்களில் துய்ப்புறுபவன் தீயவனாவான். இடையூறுகளை மகிழ்ச்சியுடன் எதிர்ப்பவன் துணிகாமுடையவன். இச்சையை வெறுக்கமாட்டாது துன்புறுபவன் கோழையன். அறம் இன்ப துன்பங்களுடன் தொடர்புடையது. இன்பம் தீச்செயலைச்செய்யும்படி தூண்டுவது. பெரும்பாலும் துன்பத்திற் கஞ்சி நாம் நற்செயலைச் செய்யாதுவிடுகிறோம். பிளேற்றோவின் வாக்கியம் ஈண்டுக் கூறியவற்றை வலியுறுத்தும். அது வருமாறு:—
"உண்மையான கல்வியென்பது யௌவனப்பருவத்திலிருந்தே எவ்வெவ நன்மைகளில் இன்புறவேண்டியதென நிச்சயித்து, அவற்றிற் பயிற்சிசெய்தல்."

மெய்ப்பாடு இன்ப துன்பத்துடன் தொடர்புடைத்து. அறம் மெய்ப்பாட்டுடன் தொடர்புடைத்து. ஆகையால் அறம் இன்ப துன்பத்துடன் தொடர்புடைத்து. ஒருவனை நல்வழிப்படுத்துவதற்கு இன்ப துன்பங்கள் துணைக்கருவியாயிருக்கின்றன. ஒவ்வொரு சிற்சத்தியையும் அவற்றின் முன்னிலைப்பொருள்களில் இன்ப துன்ப மூலமாகவே

பயிற்சிசெய்கிறோம். எல்லாரும் தீயவின்பங்களைத் தவிர்த்து நல்லமயத்தில் நன்முறையாக நல்வழிச்சேறல் நன்று. சரியென்னும் நன்மார்க்கத்திற்கும் பிழையெனும் துன்மார்க்கத்திற்கும் பொதுமலாயிருப்பது அறமென்பர் சிலர்.

மூவகையம்பற்றி ஒரு பொருளை நாம் தெரிவேம். அவை அழகெனப்படும் மேன்மை, நன்மை, இன்பம். இவற்றின் மறுதலையாகிய விரோதங்கள்: அவலட்சணம், கீழ்மை, தீமை, துன்பம் என்பன. நன்மை அழகாயும் இன்பமாயும் இருத்தலின் நல்வழிச்செல்வான் இன்புற்று மகிழ்வன். தீச்செயல்செய்வோன் துன்புறுவன்: குழவிப் பருவத்திலேயே நாம் இன்ப துன்பங்களை நுகரும் ஆற்றல் உடையேம். எமது ஆராய்ச்சியும் இன்பதுன்ப வாராய்ச்சி ஆதல் அறிக. (உலகு தோன்றிநின்றழிவதும் பரிணமிப்பதும் என்னும் கொள்கை உடைய) ஹெருக்ளிற்றஸ் கோபத்தை அடக்குவது கடுமை என்றார். கோபத்தை அடக்குவதிலும் புலன்வழிச்செல்லாமை கடினம். கஷ்டமானவற்றைச் செய்வதே திறமான செயல். அறம் இன்ப துன்பங்களுடன் தொடர்புடையதாகலான், அறஞ்செய்தல் நன்று. ஒழுக்கங்களில் வழுவாதொழுக, அறம் வளரும்; அறம்வளர இன்பம் வளரும்; ஒழுக்கந்தேய அறந்தேயும்.

### 4-ம் அதிகாரம். அளவுகடவாதொழுகுதல்.

அளவுகடவா தொழுகுதல் என்பதென்ன? ஒருவன் அளவுகடவாது ஒழுகுவனாயின், அவன் அவ்வாறு ஒழுகுமுன்னரே நல்லவன் என்பர் சிலர். இலக்கணத்தில்வல்லுநர் இலக்கண முறைப்படி வசனமெழுதுவதுபோல, அளவுகடவாதவன் நல்லவன் என்பர். இவ்வொப்பு முறை இழுக்குடைத்து. ஒருவன் இலக்கணமுறைப்படி வசனமெழுதினால், அவனை இலக்கணம் அறிந்தவனெனத் துணியப்படாது. ஏனெனில் தற்செயலாகவேனும் பிறருதவிகொண்டேனும் எழுதியிருக்கலாம். ஆதலால் இலக்கணமுறைப்படி எழுதுவோரெல்லாரும் இலக்கணவல்லுநர் அல்லர். மேலும் நல்லொழுக்கத்தைக் கலைஞானத்திற்கு உவமித்தல் பிழை. நன்மை செய்தல் நல்லவனின் இலட்சணங்களில் ஒன்றொழிய எல்லாமல்ல. நல்லவன் நன்மைசெய்யும் ஒழுக்க நிலையில் புணர்ந்தும்பாது நிற்கவேண்டும். அன்றியும் ஒருசெயலை அச்செயலின்

நன்மைக்காக, வேறுநன்மை கருதாமல் அச்செயல் சரியானதும் நன்மையானதுமென்று நினைத்துச் செய்யவேண்டும். மேலும் அம்மனநிலையில் அவ்வொழுக்கம் அசைவில்லாததாய், நித்தமாய், இன்பமாய், அறிவாய் அமையவேண்டும். கலைஞானத்திற்கு அறிவு ஒன்றுமே வேண்டப்படுமாகையால், மேற்கூறிய உவமானம் பொருந்தாது.

நல்லவனது நிலையில் இருந்து ஒருவன் நற்செயலைச் செய்வானாயின், அச்செயல் நற்செயல் எனப்படும். சிலர் நற்செயலைப்பற்றிய அபிப்பிராயங்களை ஆராய்வது ஒரு நற்செயலென நினைத்து வீண் நேரம் போக்குவர். ஆதுரன் வைத்தியன்சொல்வதெல்லாவற்றையும் கேட்டும் அதன்வழி ஒழுகானாயின் என்ன சுகம் அடைவன்? இப்படி நல்லொழுக்கம் ஆராய்வதால என்ன பயன் அடையலாம்.

### 5-ம் அதிகாரம். அறத்தின் இலக்கணம்.

இனி மேன்மை எனப்படும் அறத்தின் இலக்கணத்தை ஆராய்வாம். ஆன்மகுணம: ((1) ஒரு மெய்ப்பாடாய் (2) ஒரு சத்தியாய் (3) ஒரு பயிற்சிப்பட்ட சத்தியாய்) மூவகைத்து. மெய்ப்பாடு இன்பதுன்பங்களுடன் தொடர்புடையது. வெகுளி, அச்சம், தன்மேல் நம்பிக்கை, அழுக்காறு, உவகை, அன்பு, பகை, இச்சை, இரக்கம் முதலியன மெய்ப்பாடுகள். இவற்றில் இன்புறுவதும் துன்புறுவதுமாகிய ஆற்றல் சக்தியெனப்படும். எமது வெகுளி எமது ஆற்றலைக் குறிக்கும். மெய்ப்பாடுகளில் அளவுகடவாமை பயிற்சிப்பட்ட சிற்சத்தி. வெகுளியில் கோபிக்கவேண்டிய அளவு கோபித்தல் ஒரு அடக்கமுடைய மெய்ப்பாடு. இம் மூவகை ஆன்மகுணங்களில் அறம் எவ்வகைத்து? (1) அறம் மெய்ப்பாடன்று. (2) எமது மெய்ப்பாட்டிற்காக எம்மைப் புகழ்வாரில்லை. (3) ஆராய்ந்து சிந்தித்துத் தெளியாமல் மெய்ப்பாட்டின்வழி ஒழுகுவது எங்கள் இயல்பு. ஆனல் அறத்திற்கு ஆழ்ந்த சிந்தனையுடைய தெரிவு இன்றியமையாதது. (4) மெய்ப்பாடுகளில் நாம் துணுக்குறுகிறோம். ஆனல் அறத்தில் நாம் பழக்கப்படுகிறோம். மேற்கூறிய நியாயங்களால் அறம் மெய்ப்பாடு அன்றெனப் பெறப்பட்டது. இனி நல்லவன் இயற்கையில் நல்லவனுகப் பிறவான். அறம் செயற்கை ஆகையாலும் சிற்சத்தி இயற்கை ஆகையாலும், அறம்

சிற்சத்தி அன்று. பாரிசேடவளவையால் அறம் பயிற்சிப்பட்ட சிற்சத்தி. மூவகை ஆன்மகுணங்களில் மெய்ப்பாமும் சிற்சத்தியும் ஒழிந்த பயிற்சிப்பட்ட சிற்சத்தியே அறம்.

### 6-ம் அதிகாரம். அறத்தின் சமன்.

அறத்தின் இனம் அறிந்தோம். இனி அது எவ்வகைப் பயிற்சியாலாய சத்தி என்பதை அறிதல் நன்று. நல்லொழுக்க நிலை நின்று அந்நிலையில் நற்செயல் செய்வது அறமென்றும். கண்ணுடைமை ஒரு சத்தியுடைமையாதலால் ஒரு நன்மை. எனினும், கண்ணினது காட்சிநோக்கியே நன்றென்றோம். பயிற்சிப்பட்ட கண்ணிந்திரியத்தால் ஐயந்திரிபில்லாக் காட்சி செய்யலாம். மனிதனை மிருகத்தினின்றும் வேறுக்கும் சிறப்புத்தொழிலைச் செய்விக்கும் பயிற்சியாலாய சத்தியின் இயக்கமே அறச்செயல்.

இனி, வேறோர்வழியான் அறத்தினது தன்மையை மொழிவாம். ஒரு பொருளை அவயவப்படுத்திப் பிரிக்கும்போது ஒருபகுதி குறைந்தும் மற்றொருபகுதி கூடியும் இருக்கலாம். சமன் என்பது மிகுதி குறைவு இல்லாத அளவு. பகுதிகளைச் சமப்படுத்துவதற்குக் குறைந்தபகுதிக்குக் கூடிய பகுதியிலிருந்து ஒரு தொகையை எடுத்துக் கூட்டுகிறோம். மிகுதிக்கும் குறைவுக்கும் நடுவே நிற்பது சமன். பத்து ஒருவனுக்கு மிகுந்தும் இரண்டு ஒருவனுக்குக் குறைந்தும் இருப்பின் அவனுக்கு ஆறைச் சமன் என்போம். இது கணிதச் சமன். பத்துப் பெற்றவனிடம் நாலை யெடுத்து இரண்டைப்பெற்றவனுக்குக் கொடுத்தால், இருவரும் சமமானதொகை வைத்திருப்பதை அறிக. கணிதச்சமன் போலும் நீதியாயுள்ள ஒழுக்கச்சமனைப் பூரணச்சமன் என்போம்.

இனி ஒருவனுக்குப் பத்து நிறை போசனம் மிகுந்தும் இருநிறை போசனம் குறைந்தும் இருப்பின் அவனுக்கு ஆறு நிறை அளவு என்பது குற்றமுடைத்து. அவனுக்கு ஆறு மிகவுங் குறையவுங் கூடும். மேலும் ஒருவனுக்கு அளவாயது வேறொருவனுக்கு அளவில்லாமலும் இருப்பதும் உண்மை. இச்சமனை ஏற்றத்தாழ்ச்சியுடைய சமனென்பேம்.

இனி ஒழுக்கத்தில் இவ் விருவகைச்சமனும் உண்டோ? இம்மையில் ஏற்றத் தாழ்ச்சி நோக்கி அபூரணநன்மைகளை நிச்சயிப்போம். ஓட்டத்திலும் கலைஞானப்பயிற்சியிலும் தத்தம் சமனை நோக்குவர். ஒவ்வொரு சாஸ்திரத்திலும் சாஸ்திரப்பொருள்களின் சமன் நோக்கி ஆராய்வோம். ஒழுக்கத்திற் சமன் என்பதென்ன? மெய்ப்பாடுகளில் மிகுதலும் குறைதலும் என்றால் கருத்தென்ன? ஏற்ற காலத்திலும் ஏற்ற குணத்திலும் ஏற்ற நோக்கத்துடனும் ஏற்ற முறையானும் ஏற்ற மனிதனிடத்து அளவு நோக்கி ஒழுகுவதே நல்லொழுக்கம். ஏற்றத் தாழ்ச்சி பார்ப்பதில் மிகினுங் குறையினுங் குற்றம்.

"நன்மை எல்லையுள்ள பொருள்; தீமை எல்லையில்லாப் பொருள்" என்பர் பிதாக்கொருஸ். சமன் அறிவது இலகுவன்று. ஒருவர் தமது விவேகத்தால் சமன்நோக்குவாராயின் அது நடுவுநிலை யெனப்படும். அறத்தினது வரையறை சமனாயினும் அதை நன்மையென உற்று நோக்குவேமாயின் அது ஓர் அந்தமும் குறைவில்லாததுமாய்த் தோன்றும். எல்லாச் செயல்களையும் வரையறுத்தல் இயலாது. தீமை பொறாமை வெட்கம் அழுக்காறு பிறரில்விழைதல் களவு கொலை முதலியன சமன்கள் அல்ல. இவற்றை அந்த நிலையாக நாம் கொள்வோம். ஏனெனில் தீயொழுக்கம் இவற்றின் மிகுதியன்று. இம்மெய்ப்பாடுகளை நன்மையோ தீமையோவென ஏற்ற காலம், இடம், மனிதன், முறை, அளவு முதலியன நோக்கி நிச்சயித்தல்செய்யேம். இவற்றின் சமன்களை நிச்சயிக்கும்போது, இவற்றை அந்தங்கள் என நிச்சயித்தேம். கோழைத் தன்மையிலும் தூர்த்தத்தன்மையிலும் மிகுதி குறைவு நிச்சயித்தல் தவறு. அந்தங்களில் மிகுதி நோக்குவேமாயின் மிகுதியில் மிகுதியும் குறையிற் குறைவுமாய் நோக்குவதாய்முடியும். வீரம் முதலியன சமனாயிருத்தற்றுச் சொற்பமேனுங் குறையக்கூடாதாகையால் சமனும் ஒரு அந்தமே. சுருங்கச்சொல்லின் மிகுதியிலும் மிகுதியின்று. அளவிலும் மிகுதியின்று.

### 7-ம் அதிகாரம். சமன் ஆராய்தல்.

பொதுவகையான ஆராய்விலும் சிறப்புவகையான் ஒவ்வோர் அறத்தையும் ஆராய்தல் பயனுடைத்து. அச்சத்திற்கும் மூர்க்கத்திற்கும் சமன் வீரம். அச்சம் ஒரு கோழையின் தன்மை, மூர்க்கம் பேதை

யின் தன்மை. இன்ப துன்பங்களில் அளவுகடவாதொழுகுதல் அடக்க முடைமை. அளவுகடத்தல் தூர்த்தத்தன்மை எனப்படும் கீழ்மை. புலன்வழி இன்புறுதான இவ்வுலகில் இல்லை; உண்டாயின் சுவை யுணர்ச்சி யில்லாதவனா என்பேம். பணச்செலவில் அளவுகடவாதிருத் தல் ஈகை; மிகுதி வீண் செலவு; பணச்செலவில் குறைதல் கயமை. வீண்செலவாளி செலவுசெய்யும்போது அளவுக்கு மிகக் கொடுப்பான். தான் பணத்தைப் பெறும்போது அளவிற் குறைந்து கொள்வான். கயவர் ஈவதினும் ஏற்பதினும் கவனமாய் அளவுநோக்குவர். பொழிப் புரைபோலச் சிற்சில குறிப்புக்களை மொழிந்தோம். அறங்கள் பரந்து கிடத்தலின், பின்னர் விரிவாக வரைவாம்.

சிறு தொகைளில் மிகாமலும் குறையாமலும் செலவுசெய்தல் ஈகை என்றும். பொருந்தொகைகளில் அளவுடன் ஈதல் வள்ளற்றன்மை. எளிமையும் கீழ்மையும் இதன் அந்தங்கள். இவ்வந்தங்கள் ஈகையின் அந்தங்களுடன் எவ்வாறு வேற்றுமைப்படுவன என்பதை ஆராய்ந் தறிக. இழிபு மானம் என்னும் குணங்களில் சமன் பெருந்தன்மை; அந்தங்கள் சிறுமையும் வீண்தன்மையும். மானத்தில் அதிகமாய் ஆசைப்படுதல் பேராசை; மானத்தில் குறைவாயிருத்தற்குப் பதமின்று. பண்பின் பெயரில்லாமையால், அவா அதிகரித்தவனையும் நன்மக னெனக் கொள்வர் சிலர். வெகுளிக்குறைவு சாந்தம்; மிகுதி கடுஞ் சினம்.

இதுகாறும் குறிக்கப்பட்ட அறங்களை ஒழித் தொழிந்த மூவகை அறங்கள் உண்டு. அவை ஒருவாறு ஒரு இனத்தைச் சார்ந்தவை யாயினும் சாதிவகையான் வேற்றுமைப்பட்டவை. அவற்றின் இனம் பேச்சு. பேச்சென்னும் இனத்தைச் சாதிவகைபாக வகுக்கும் ஆதா ரம் ஒன்று வாய்மை; வேறொன்று உவகை, மற்றொன்று வாக்குச்சாது ரியம். சம்பாஷணையில் பொழுதுபோக்குதல் என்னும் உவப்பின் அந்தங்களுக்குப் பதங்களின்மையால் நாம் உண்டாக்கவேண்டும். (1) வாழ்க்கையில் உவப்பாயிருத்தலின் சமன் இனியவைகூறல். இதன் அந்த நிலைகள் முகமன் கூறுதலும் சுரண்டுந் தன்மையும். (2) இலக் கியத்திலேனும் பேச்சிலேனும் உவப்பாயிருத்தல் வாக்குச்சாதுரியம்

இச்சாதுரியம் மிகின் விகடமெனப்படும். குறையின் விலங்குத்தன்மை யெனப்படும். (3) பேச்சில் வாய்மை நோக்கும்போது அளவு வாய்மை; ஒரு அந்தம் நிந்தை; மற்றையது வீம்பு. வீம்பு, தற்புகழ்ச்சி, புளுகு என்பன பரியாயப்பெயர்கள்.

இனி, வெட்கம் ஒரு மெய்ப்பாடாயினும், அதில் அளவு ஆராயப் படுவதில்லை. அது அறனன்று. வெட்கத்தைச் சன்மார்க்கம் துன்மார்க்கம் என முறை வகுக்காதுவிடினும் அக்குணம் பெரும்பாலும் புகழப் படும். சான்றோரது வெகுளி என்பது அழுக்காறு, பிறர்கேடுவிரும்பு தல் என்பவற்றின் சமன். தகுதியில்லாதவன் பிறர்பொருளை வௌவி யேனும் தற்செயலாகவேனும் செல்வனாகில், சிலர் அழுக்காறு அடைவர். இது நன்மக்களது வெகுளியெனப்படும். நீதியின் பலவகைச் சமனும் பின்னர்க் கூறுதும். ஒழுக்க அறங்களை முறைவகுத்தபின், புத்தி தத்துவத்தில் தோன்றும் அறங்களையும் வகுப்போம்.

### 8-ம் அதிகாரம். தீயோழுக்கம் ஒரு அந்தம்.

ஒரு மெய்ப்பாடு மிகுதி குறைவாகிய இருவகைத் தீயொழுக்கமும் சமன் என்னும் நல்லொழுக்கமுமாய் மூவகைநிலையுடைத்து. இம் மூவகைநிலைகளுள் ஒன்றற்கொன்று விரோதம். சமனான எண் ஒன்றைக் கூடிய எண்ணுடன் நோக்கும்போது குறைவாயும், குறைந்த எண்ணு டன் நோக்கும்போது மிகுதியாயும் இருத்தல் அறிவேம். கோழை என்னும் அச்சமுடையவனுக்கு வீரத்தன்மை ஓர் பேதமையாகத் தோன்றும். மூர்க்கனுக்கு வீரம் ஓர் கோழைத்தன்மையாய்த் தோன் றும். மூர்க்கத்தினது விரோதம் கோழைத்தன்மை. வீரம் அச்சத் திற்கும் மூர்க்கத்திற்கும் விரோதம். மூன்று குணங்களும் ஒன்றற் கொன்று விரோதமாதல் ஓர்ந்துணர்க. கயவனுக்கு ஈகை வீண்செல வாயும் வீண்செலவுசெய்பவனுக்கு ஈகை கயமையாயும் தோன்றுதல் காண்க. கயமையும் வீண்செலவும் மிகவும் விரோதம்.

சில அறங்களில் ஒரு அந்தத்திற்கும் சமனுக்கும் நெருங்கிய தொடர்புண்டு; உதாரணம் வீரமும் மூர்க்கமும், வீண்செலவும் ஈகை யும்; வீரத்திற்கும் மூர்க்கத்திற்கும் உள்ள விரோதத்தினும் வீரத்திற் கும் அச்சத்திற்கும் உள்ள விரோதம் மிகப் பெரிது. விரோதம் மிகு தற்கும் குறைதற்கும் இரு நியாயங்கள் உள. இயற்கையில் விரோதம்

சொரூபத்தாற் குறைந்தும் மிகுந்தும் இருக்கும். வீரம் மூர்க்கம் என்பவற்றின் சொரூபம் மிகவும் ஒப்புடைத்தாதலால் விரோதம் குறை தலையும், வீரத்திற்கும் அச்சத்திற்கும் சொரூபத்தில் வேற்றுமை பெரி தாதலால் விரோதம் மிகுதலையும் காண்க. மனிதன் இயற்கையில் இன் பத்தை விரும்புவது மனிதசுபாவமாகலால், சமனுகிய இன்பத்திற்கும் அதன்மிகுதியாகிய இன்பத்திற்கும் விரோதம் புலப்படாது. ஆனுல் துன்பத்திற்கும் இன்பத்திற்கும் விரோதம் மிகவும் பெரிதாய்த்தோற் றும்.

## 9-ம் அதிகாரம். அறம் என்பது நீதி.

நல்லொழுக்கமென்பது சமன் நோக்கி ஒழுகுதலென வற்புறுத்தி னேம். சமன் மிகுதலும் குறைதலும் எற்காத ஓர் அந்தம். சாஸ் திர அறிவில் வட்டத்தின் மத்தியை இலகுவாய் அறியலாம். ஆனுல் ஒழுக்கத்தின் சமனை அறிவது இலகுவன்று. கோபித்தல் இலகு; கோபிக்கவேண்டிய மனிதன், காலம், இடம், அளவு, முறை முதலியன அறிதல் மனிதனுக்கு இயலாதது. அறம் என்னும் சரியான நீதிநிலை அரிதினும் அரிது. பெருந்தவறிழைப்பதினும் சிறுபிழைசெய்தல் நன்று. மனிதன் தனது இயல்பை அறிந்தும் தனது மனவலிநோக்கியும் அளவு கடவாது ஒழுகல்வேண்டும் உலகத்தாரது அபிப்பிராயம் மாறுத லடைவதால் சிறுபிழைசெய்தவன் இகழப்படான். எது சிறுபிழை யென்று ஆராயவேண்டும். இவற்றிற்கெல்லாம் பொதுப்பிரமாணமில்லை; விசேடச்செயல் நோக்கித் தீர்மானிப்பேம்.

[தொடரும்.]

த. இராமநாதபிள்ளை, B.A.

---

உ

கணபதிதுணை.

பலபட்டடைச் சொக்கநாதபிள்ளை பாடிய

# மதுரை மும்மணிக்கோவை.

## காப்பு.

நேரிசைவெண்பா.

மும்மணிக் கோவையா னான்மாடக் கூடல்வாழ்
எம்மணிக் கோவையெடுத் தேத்துதற்கு—வெம்மை
வெளிறுதிருப் பாதமலர் வேண்டவருள் சித்திக்
களிறுதிருப் பாதமலர் காப்பு.

## நூல்.

### அகவல்.

க. திங்களமு தூற்றுங் கங்கைநதி சுமக்கும்
பவளமால் வரையிற் றவழ்கருங் கொண்டலின்
மின்னொளி பரந்து வெயில்விரித் தாங்குக்
கூந்தலுஞ் சடையுஞ் சேர்ந்தழ கெறிப்ப
ஒற்றை நாட்டமு நெற்றியிற் றிலகமும்
சாந்தொடு [1]மெழுதிய குங்குமப் பொட்டெனச்

---

குறிப்புரை.

(காப்பு.) மும்மணி...நான்மாடம்; எண்ணணி. மணிக் கோ-சொக்கநாதர்; மணி-அழகு. வெளிறு-பாசஅறிவு, பசுவறிவு; (தணிகை. காப்பு. 2.) அமலர்-தூய்மையையுடைய அடியார்கள். சித்திக்களிறு-சித்தி விநாயகர். அமலர் வேண்ட வெளிறு திருப்பாத அருளென்க.

க. இச்செய்யுளில் முதல் 50 அடிகளில் அர்த்தநாரீசுவரத்திருவுருவ வருணனை கூறப்படும்.

1. திங்கள் அமுதை ஊற்றுவது கங்கைநதியில். 2-4. கூந்தலுக்கு மேகமும் சடைக்கு மின்னலும் உவமை. 6. சாந்து-சந்தனப்பொட்டு.

[பிரதிபேதம்.] [1]மெழுதிய.

சேந்த கண்ணொடுங் கரியவிழி யலர
மற்றுமோர் விழியின் முற்றுமோர் குவளை
கதிர்முகங் கண்டு புதுமுக மலர
வெவ்விடங் குடித்த வெவ்வரோ யகலக்
குமுதத்திற் பிறந்த வமுதம் பொலிய
ஒருசெவி யரவ மொருசெவிக் குழையின்
பன்மணி நிலவைத் தன்மணி காட்ட
எஞ்சுவா னளித்த [1]நஞ்சுபொதி கண்டமும்
தங்குல களித்த மங்கலக் கழுத்தும்
ஒன்றுபட் டொளிரக் கொன்றையொடு பிணித்த
கோங்கரும் பன்ன கொங்கையும் பைந்தலைக்
கொத்து மாலையு முத்துமா லிகையும்
மென்னகை பரப்பப் பன்னகப் படமணி
ஒருபுறக் கச்செண விருபுறக் கச்சின்
[2]உருவமுஞ் சான்ற மருமமுந் தோன்றக்
கமலத்தின் மலர்ந்த காந்தட் போதும்
காந்தளின் மலர்ந்த கமலமும் போல
வெங்கதிர்க் கனலும் பங்கயக் கணையும்
தரித்திடுந் தகைமையிற் றிருக்கரம் விளங்க

---

7. இங்குக் கூறப்பட்டவை திருமுகத்திலுள்ள கண்கள். 8. மற்றும் ஓர் விழியின்—அம்பிகையின் வேறொரு விழியைப்போல. குவளை—கண்ணுவதஞ்சமாகிய குவளைப்பூ; "காதின் மிசைநீலங் கைபுனைவீர்" (தண்டி. சூ. 41, மேற்.); "பான லஞ்செவி மிசையணிந் தனளொரு பாவை" (பிரபு. மாயைபூசை. 9.) 8–9. குவளை மலர. 9. கதிர்முகமென்றது வலக்கண்ணை. 10–11. திருவாய்மலரின் வருணனை. குமுதம்—அம்பிகையின்வாய். 12–3. திருச்செவி. வலச்செவியிற் குழையாக அணிந்த பாம்பின் மாணிக்கம், இடச் செவியிலணிந்த குழையிலுள்ள முத்தின் ஒளியாகும் நிலவைக் காட்ட. 14–6. திருக்கழுத்து. 16–21. திருமார்பு. 19. நகை—ஒளி. படம் அணி. 19–20. படம் வலப்புறக்கச்செண விளங்க. 22–5. திருக்கரங்கள். 24. பங்கயக்கணை—தாமரையாகிய அம்பு; இஃது அம்பிகையின் திருக்கரத்திலுள்ளது; அழகாம்பிகை. சப்பாணிப். 5.

[பி-ம்.] [1]நஞ்சுபதி, [2]உருவங் கான்ற.

ஒருமக வருந்திய யிருமகப் பெற்றும்
மும்மடி யுதாஞ் செம்மை பூப்ப
ஒருபாற் புலியு மொருபாற் கலையும்
மருங்கிற் கிடந்து வனப்புவழிந் தொழுக
வாய்விட வரவின் வாய்விடாச் சிலம்பும்
வாய்விட் டிரங்கு மணிச்சிலம் பொன்றும்
அதிர்சிறு சதங்கையு மொருபெருஞ் சதங்கையை
நேரச் சுழலும் வீரக் கழலும்
முறைமுறை வயங்க மறைமுறைக் கொல்காது
வெஞ்சினக் கால னஞ்சச் சீறியும்
பஞ்சினுக் கஞ்சி யஞ்சிமுகஞ் சிவந்தும்
எம்முடைத் தலையினு மம்மிக் கல்லினும்
வைத்திடப் பொறுத்தும் பத்தியிற் பணிவார்
கண்மலர் பறித்துங் கரமலர்க் கிரங்கியும்
மாநிலங் கிழித்த வேனத்திற் கொளித்தும்

---

**26-7.** திருவயிறு. **26.** ஒருமகவு-சிறுத்தொண்டருடைய குமாரர். இருமக-விநாயகர் முருகக்கடவுள். **27.** மும்மடி-மூன்று மடிப்புக்கள். மூற் கூறிய மூன்றுசெயல்களுக்கு ஏற்ப மும்முறை என்ற பொருளும் தோற்று கின்றது. **28-9.** திரு இடை. புலி-புலித்தோல். கலை-ஆடை. புலி, கலை(மான்) என்றது ஒருநயம். **30-42,** திருவடிகள். **30.** வாய் விடம்-வாய்ந்த நஞ்சு. பாம்பு தன்வாயில் வாலைப் புகுத்தி இறைவன் ஆணையால் இறுகக் கடித்துக்கொண்டிருக்கின்றமையின் வாய்விடாச் சிலம்பு என்றார்; "பொன்னெடு மலையைப் பன்னிரு வடங்கொடு, புணரியைக் கடைந்தநாள் புணர்த்த பன்னக, அரசன்வாய் நெரித்தவ னணிவா லுய்த்திடப், பற்றிவளை யெயிற்று னெடுமூன் கையிற், கடகமாயினால்" என்ற பழம்பாடலும், 'இதில் பாம்பின்வாலும் தலையும் முடிந்திட நீளம் போதாமையின் வாயை நெரித்து வாலைப் புகவிட அது வாலைக் கடித்துக்கொண்டு கங்கணமானது. ஆதலால் ஈச்சுவரன் ஆக்கினையை அஞ்சி வாய்விடமாட்டாது' (தக்க. 645, உரை) என்பதும் இங்கே அறிதற்குரியன. **32.** பெருஞ்சதங்கை-ஒருவகைக் காலணி; "பரித்தாளும் வாணன் பலசதங்கை யிட்ட, திருத்தாளி னூபுரமுஞ் சேர்த்தி" (தேவையுலா, 76) என்பது இந் நூலாசிரியர் வாக்கு. **34.** மறை முறைக்கு-வேதங்களின் முறையீட்டிற்கு. **36.** பஞ்சினு...சிவந்து: "பஞ்சி யடாணிச்ச நெருஞ்சி யீன்ற பழமாலென், றஞ்சு மலரடிகள்" (சீவக. 341); "அரக்கார்ந்த, பஞ்சிகொண் டூட்டினும் பை யெனப் பையெனவென், றஞ்சிப்பின் வாங்கு மடி" (நாலடி. 396.) **39.** கண் மலர் பறித்து மென்றது சக்கரம் பெறுதற்குத் திருமால் கண்ணைப்பறித்து வழி பட்டமையைக் குறித்தது. **40.** ஏனம்-ஆதிவராகம்.

வள்ளவாய்க் கமலக் கிள்ளையைச் சார்ந்தும்
பொன்னடி சிறப்ப வென்னையா ளுடைய
தெய்வநா யகநின் மெய்யொரு பாதியும்
பவளக் கொம்பிற் படர்பசுங் கொடியெனத்
தவள வெற்பிற் றழைத்தமா கதமெனப்
பொங்குகனற் கொழுந்தொடு புகைக்கொழுந் தென்ன
இருநிறங் கொண்ட விந்திர வில்லெனப்
பாற்கட லோடுங் கார்க்கடல் புணர்ந்தென
இமையவெற் புதவிய வுமையவ ளொருத்தியொடு
வீற்றிருந் தருளிய விண்ணவர் கடவுள்
ஆடற் கொடியமர் கூடற் றனிச்சுடர்
மண்ணகத் திருந்து வான்முகடு தடவி
வெண்கரி சுமக்கக் கருமுகில் சுமந்து
மேருவைப் [1]பழித்த சீரிய விமானத்து
வளரொளி கிளைத்த மாணிக்கக் குன்று
கதம்பகா னனத்தி லிதம்பெற முளைத்த
பாண்டரங் கத்தனி முதலை
வேண்டுது மவனரு ளீண்டுபெறற் பொருட்டே. (க)

---

41. கிள்ளை-திருமகள். 47. "தானு மமையவளும், இந்திர சாப மெனுமழகும்" (தேவையுலா, 260.) 51. ஆடற்கொடி-வீரலட்சுமி. 53. வெண்கரி-எட்டு வெள்ளையானைகள். 54. விமானம்-இந்திரவிமானம். 56. கதம்ப கானனம்-கடம்பவனம். 57. பாண்டரங்கம்-ஒருவகைக்கூத்து; இது முப்புரங்களை வென்றபோது ஆடியது; "ஏறமர் கடவுண் மூவெயி லெய்வுழிக், கூறுகூ றாகக் கொடியொடும் படையொடும், வேறுவே றுருவின் விண்மிசைப் பரந்தன, ரவ்வழி யொளியொடு முருவொடுந் தோன்றித், தேர்மு னின்று திசைதலை பனிப்பச், சுவையுங் குறிப்பு மொழிவில தோன்றி, யவையவை யவ்வழி யாடின ளூட, மைந்தரு மகளிருந் தந்தநிலை யழிய, மெய்ப்படு சுவையொடு கைப்படை மறப்பக், கடிய காலக் காற்றென வேற்றவன், படிநிலை திரியாப் பாண்டரங் கம்மே" கலி. 1, ந. மேற்.

[பி-ம்.] [1]பழிக்குஞ்.

### வெண்பா.

உ. பொருட்டா வெனையாண்டு போதன்மாற் கெட்டா
அருட்டோய வைத்தருளு மத்தர்—இருட்டோயும்
பூங்கடம் பாடவியார் பொன்னடியைப் போற்றுதார்
தாங்கடம் பாடவியார் தாம். (உ)

### கலித்துறை.

ங. தாமொன் றிணுங்கல வாதே கலந்தெம்மைத் தம்மையிவர்
ஆமென் றறியவொட் டாதே [1]புசிப்பித் தருவினைத்தீ
வேமென் றவித்தரு ளாதே யருளி வெளிப்படுவார்
மாமென் றுவரிதழ்க் கூடற் பிராட்டிக்கு வாய்த்தவரே. (ங)

### அகவல்.

ச. வாய்ந்தபே ருலகிற் காய்ந்திடும் பசியாற்
குன்றுபல வேறியுஞ் சென்றுகடல் கடந்தும்
வெங்கா னகத்திற் றங்கா து திரிந்தும்
புனல்வழி வெயரொடு கனல்வழி நடந்தும்

---

உ. பொருட்டா—பொருளாக; பொருட்டு: வழக்கு; இருட்டுப்போல. போதன்—பிரமன். மாற்கு எட்டா. அருளில் மூழ்கும்படி. இருள்தோயும். கடம்பாடவி—கடம்பவனம். தாங்கள் தம் பாடு அவியார் தாம்; பாடு—வருத்தம்; "பாடுபெட்டுத்தேடி" (நல்வழி. 22); "பட்டபாடே" வி. பா. கிருட்டினன் தூது. 16.

ங. தாமென்றது சிவபெருமானை. எம்மையும் தம்மையும். புசிப்பித்து-வினைப் பயன்களை உண்பித்து. மென் துவர்—மெல்லிய பவளத்தைப்போன்ற. கூடற் பிராட்டி: "பொன்போலுங் கூடற் பிராட்டியை பச் சேவிக்கப் போம்பொழுதில்" தனிப்.

ச. இதன் 27-ஆம் அடிவரையில் தம் பசிப்பிணியைப் போக்கிக் கொள்ளும்பொருட்டு மனிதர் செய்யும்பலவகைச்செய்திகள்கூறப்படும்.

1. பிறவிப்பிணியை நீக்கிக்கொள்வதற்குக் கருவியாகிய மூர்த்தி, தலம் தீர்த்தம், அடியார்கூட்டம் முதலிய இருத்தலின் "வாய்ந்த பேருலகில்" என்றார். 4. புனல்வழி வெயரொடு—வழிகின்ற வேர்வை நீரோடு. கனல்வழி—கொதிக்கின்ற பாலைநிலத்துவழியில். 1–4. "சேவித்துஞ் சென்றிரந்துந் தெண்ணீர்க் கடல்கடந்தும், பாவித்தும் பாராண்டும் பாட்டிசைத்தும்—போவிப்பம், பாழி னுடம்பை வயிற்றின் கொடுமையால், நாழி யரிசிக்கே நாம்" (நல்வழி, 19.)

[பி-ம்.] [1]பொசிப்பித்.

வெயிற்றலை பிளப்ப வெள்ளிடை நின்றும்
அயிற்றலை யெயிற்றி னரவினைப் பிடித்தும்
கையா னடர்ந்துங் கயிற்றுவழிச் சென்றும்
கம்பத் தேறியு மும்பரிற் பறந்தும்
நீரிடை மிதந்து நெருப்பிடை மூழ்கியும்
ஒவ்வா வேடஞ் செவ்வியிற் புனைந்தும்
அறநெறி யுரைத்து மறநெறி யொழுகியும்
பிறர்பொருள் வெஃகித் துறவு பூண்டு
மாயாப் பிறவியை யீவார்க் குதவியும்
சிற்றினத் தவர்த முற்று வறிவால்
தம்பே ரறிவைத் தாழ்ந்திடச் செய்தும்
காமமுந் துறவுங் காவெனத் தூங்கும்
தன்மை யோர்க்கு மென்மொழி மடவார்
கோலமு மின்பமுங் குறிப்பொடுங் கூறி

---

5. வெள்ளிடை—நிழலில்லாத இடம். 6. அயில் தலை எயிறு—கூரிய முனையையுடைய பல். 9. நீரிடை மிதத்தல்—ஜலஸ்தம்பம். நெருப்பிடை மூழ்கல்—அக்கினிஸ்தம்பம். 10. ஒவ்வாவேடம்—கூடாவொழுக்கத்திற்கு ஒவ்வாத துறவு வேடத்தை; "வலியி னிலைமையான் வல்லுருவம்" (குறள். 273) என்றார் திருவள்ளுவரும். 13. மாயாப் பிறவியை ஈவார்க் குதவல் "நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து, வாழ்வாரின் வன்கணா ரில்" 'தானஞ்செய்வாரை வஞ்சித்தலாவது யாம் மறுமைக்கட் டேவராதற்பொருட்டு இவ்வருந்தவர்க்கு இன்ன தீதமென்று அறியா தீந்தாரை அதுகொண்டு இழிபிறப்பினராக்குதல். அவர் இழிபிறப்பினராகுதல் 'அடங்கலர்க் கீந்த தானப் பயத்தினா லலறு முந்நீர்த், தடங்கட னடுவுட் டீவு பலவுள வவற்றுட் டோன்றி, யுடம்பொடு முகங்க ளொவ்வா ரூழ்கனி மாந்தி வாழ்வார், மடங்கலஞ் சீற்றத் துப்பின் மானவேன் மன்ன ரேறே' என்பதனா னறிக' (குறள். 276, பரி.) 14–5. சிற்றினம் சேர்ந்து அதன் பழக்கத்தால் தம் அறிவைக் குறைத்தும்; அவர்களுக்கு இச்சகம் பேசித் தம்அறிவைக் குறைத்துக்கொண்டுமென்பதும் பொருந்தும். 16–8 காவென—காமரத்தில் தூங்குவதுபோல; காமரம்—காவடித்தண்டு. காமமும் துறவும் சமமாகத் தன்மையாகிய காத்தண்டில் உள்ளன. அத்தகையோர்க்கு மடவார்கோலம் கூறுதலாற் காமம் மிகும். அப்பொழுது ஒருபால் கனமேற மற்றொருபால் கனமின்றிக் கெடுதல்போலத் துறவு கெடும்.

இருள்வழி பழக்கிப் பொருள்பல கவர்ந்தும்
உண்ணு தூட்டியு முறங்கா துறக்கியும்
வன்சொற் பொறுத்து மின்சொற் கிடைந்தும்
புத்தமு தென்னச் சொற்சுவை திரட்டிக்
கல்லாப் புல்லர் பொல்லாச் செவியாம்
புற்றி னூற்றி வெற்றுடம் பாகியும்
உளம்பதை பதைப்பத் தளர்முக மலர்ந்தும்
தங்குறை பகர்ந்திட் டவர்குறை கேட்டும்
இவ்வா றுழலு மியல்பினோர் பலரே
அவ்வா றுழலா தணிநெடு மாடக்
கூடலிற் பயின்று நீடுதிரை வையைத்
தண்டுறை படிந்து வண்டிசை மிழற்றும்
செம்பொற் றாமரைப் பைம்புன லாடி
ஐந்துகைக் குன்றைச் சிந்தையா டிறைஞ்சி
மும்மூலை சுமந்து நுண்மருங் கொசியச்
[1]செவ்வரி பரந்த கருங்கயல் புரண்டு
பைங்குழை கடப்பத் திங்களுக் கொல்காப்
பேரிருள் பிறங்க வாரியிற் பிறந்த
தெள்ளமு தவர்ந்து கள்ளவிழ் கடப்பங்
காவிடை நின்ற தேவியைப் பரவி
ஐயநின் பாதச் செய்யதா மரையிலென்
கைம்மலர் தூவி மெய்ம்மயிர் பொடிப்ப
நாய்த்தலை கிடத்தி வாய்த்தலை வாழ்த்திக்
கண்கனி கூரப் புண்படு முள்ளத்

---

21. இடைந்தும்-ஏமாந்துநின்றும். 23. பொல்லாச்செவியென்றது "கேள்வியாற் றோட்கப்படாத செவி"யை (குறள். 418.) 25. உள்ளொன்று புறம்பொன்றாக இருத்தல். 31. பொற்றாமரைப் பைம்புனல்-பொற்றாமரைத் தீர்த்தத்தில். 32. ஐந்துகைக் குன்றை-சித்திவிநாயகரை. 35-6. திங்களுக்கு ஒல்காப் பேரிருள்-கூந்தல். 36-7. வாரியிற் பிறந்த அமுது-திருமகளை; (மதுரைமும். ௧: 41.) 41. நாய்த்தலை-நாய்த்தலைபோன்ற என்றலையை. வாய்த்தலை-வாயால். 42. புண்படும்-முன்பு புண்பட்ட.

[பி-ம்.] [1]செவ்வரி பரந்து.

தானந்த வெள்ள மலையெறிந் தோட
இறவாப் பேறு மிறந்தவ ரடையும்
பிறவாப் பேறும் பெயனே னடைந்து
கோயில் சூழ்ந்து வாயில் கடவாதின்
குடிவழித் தொண்ட ரடியிணை விளக்கித்
துவர்க்கலை தோய்த்துப் புலர்த்திக் கொடுத்துப்
புகுந்துபைம் புனலை முகந்துவந் தளித்துச்
செம்மலர் கொணர்ந்து கைம்மலர்க் குதவி
அம்மலர் சொரிவார் சொன்முறை கேட்டுத்
திருமுறை சுமந்து செய்முறை வழுவா
தேவல்புரிந் தொழுகித் தேவரும் காணு
மன்னிரும் புகழ்மது ரேச
நின்னை வேண்ட வென்னையாண் டருளே. (௪)

வேண்பா.

ரு. ஆண்டாய் தமிழ்க்கூட லண்ணலே நின்பாதம்
வேண்டா வெனையும் வெருளாமல்—ஈண்டிரங்கிக்
காவாக்கா லுன்னைக் கவிஞரெடுத் தெவ்வாறு
மாவாக்காற் சொல்வார் வளம். (ரு)

கலித்துறை.

சு. வளத்தானை யும்பர் வளர்வானை வேண்டிவன் னஞ்சையுண்ட
களத்தானை முத்தமிழ்க் கூடற் பிரானைக் கனிந்தவர்தம்
உளத்தானை [1]யெண்ணி யுருகார் பிறவி யுலைத்தெறியச்
சளத்தானை யுண்ட கனிபோற் கெடுவர் தவறுபட்டே. (சு)

---

46-முதல் துறவிகளுக்குத் தொண்டுபுரிதலை வேண்டுகின்றார்.
48. துவர்க்கலை-காவியுடை. 52. திருமுறை-அடங்கன்முறை.
ரு. ஆண்டாய்:விளி. மா வாக்கால்-பெரிய வாக்கு வன்மையால்.
சு. வளத்தானை-செல்வத்தை யுடையவனை; உம்பர் என்பதனோடு கூட்டி வளம்பொருந்திய சேனைகளையுடைய தேவனெனினும் பொருந்தும். வளர்வானை-வளர்தலை; வான்: தொழிற்பெயர்விகுதி. களம்-கழுத்து. பிரானை-வள்ளலை. உலைத்து-வருத்தி. சளத்து-வஞ்சனையையுடைய; ஆனைக்கு அடை. ஆனையுண்ட கனி-ஆனையென்னும் நோயால் உண்ணப்பட்ட விளங்கனி; "தூம்புடை நெடுங்கை வேழந் தீற்றிய வெள்ளி லேபோல்" (சீவக. 282) என்பதும் அதன் ஒப்புமைப்பகுதிகளும் இங்கே அறியற்பாலன.

[பி-ம்.] [1]வேண்டி யுருகார்.

## அகவல்.

எ. தவருச் செல்வத் துவரியிற் படிந்து
பொருட்புனல் வாரி யருட்புலத் துப்பெய்
தறப்பெரும் பயிரைச் சிறப்பொடும் வளர்த்து
வள்ளலைப் பழித்து வரையாது கொடுத்துச்
செந்தமிழ் மாலையு மந்தண ராசியும்
புகழா பாணமு மிகழா தணிந்து
குன்றிற் சுடரென நன்றியொடு பரந்தும்
பொற்கலத் தன்ன மொக்கலொ டருந்திச்
சாந்தம் பூசிப் பூந்துகி லுடுத்துப்
பலபணி யணிந்து கலவியிற் பயின்று
மக்கள்சொற் குருகி யொக்கக் குழறிப்
பொன்றிகழ் மேடையிற் றென்றலுக் குடைந்து
மணிநகை மடவா ரணிமுலை தழுவியும்
கைம்மா வுகைத்தும் பரிமா நடத்தியும்
காமரு மடந்தையர் சாமரை யிரட்டச்
சிவிகை யேறிக் கவிகையொடு வந்தும்
இன்னிலை யோர்க டந்நிலை வழாஅது
வீழ்நாள் படாஅ வாழ்நாள் பெறுதலும்
தவப்புணை பிடித்துப் [1]பவக்கட னீந்தக்

எ. 1-முதல் 18-வரை சோக்கநாதரை வழிபடுவோர் பேறு கூறப்படும்.

1. செல்வத் துவரி--செல்வமாகிய கடல்; "உவர்க்கட லன்ன செல்வரு முளரே" (நன். வி. சூ. 269, மேற்.) 2. பொருட்புனல்-பொருளாகிய நீரை. அருள்-தொடர்பில்லார்மாட்டுச் செலுத்துவது; ஒன்றின் துயர்கண்டாற் காரணமின்றித் தோன்றும் இரக்கமெனலும் ஆம். அருட் புலம்-அருளைச் செலுத்துதற்குரிய இடம். 7. குன்றிற் சுடரென--மலைமே லேற்றிய விளக்குப்போல; (சீவக. 262); "குன்றின்மே லிட்ட விளக்கு" (பழமொழி, 204.) பரந்து-புகழாற் பரவி. 8. ஒக்கல்-சுற்றம். 9. பூந்துகில்-பூத்தொழிலமைந்த ஆடை. 10. பணி-ஆபரணம். 13. மணி-முத்து. 14. கைம்மா-யானையை. 15. இரட்ட-மாறி யசைய. 16. கவிகை-குடை. 17. இன்னிலையோர்-இல்லறத்தார்கள்.

19-முதல் சோக்கநாதரை வேண்டாதார் உறும் துன்பம் கூறப்படும்.

19. தவமாகிய புணை. பவக்கடல்-பிறவியாகிய கடலை.

[பி-ம்.] [1]பவக்கட னீந்திக்,

காயத் தீவிற் றீவினைச் சரக்காற்
சனனப் பொருளைத் தளரா தீட்டியும்
நவரசங் கனிந்த நாற்கவிப் புலவர்
மதுர மூறு முதுமொழிப் பாடலை
அன்பொடு கேட்டு நன்குமதித் தேத்தி
அரும்பொருள் கேட்கி னப்பொருட் கேங்கிச்
சொற்குறை தேடி முற்குறை நினைத்து
நகைமுக மொளித்துப் புகைமுகங் கொண்டு
தம்பா லவரை வெம்பிச் சீறி
வறிதே போக்கு நெறிபல கருதியும்
பற்றுப் பழங்கலை தைத்துடை யுடீஇ
நொய்யடு நீரைக் கையா லருந்தி
நிறையா வயிற்றொடு தரையிற் கிடந்து
கண்படை நீங்கிக் காதலை யொழிந்து
மனைவியைத் துறந்து மக்களை யொரீஇ
எற்பன [1]புசியா [2]நோற்பவ ராகியும்
தருந்தமக் கொன்றும் [3]விருந்தினர்க் கொன்றும்
குறித்துண் பிரித்துக் கூடா தளித்தும்
தம்மனை யிகந்து பிறர்மனை விரும்பியும்
ஈதலுக் கொல்கி யேற்றலுக் கிசைந்தும்
ஊன்சுவை பெருக்கி யுயிர்பல குறைத்தும்
மேற்குலத் தெய்தி யிழிகுலத் துண்டும்
இழிகுலத் தெய்தி மேலோர்க் கூட்டியும்
உடற்பயன் கொள்ளா தடற்பெருங் காலத்
திடுவிருந் தாய்ச்சில [4]வெவ்வா றழிதலும்

---

20. காயத் தீவில்-உடம்புகளாகிய தீவுகளில். 25. பொருள்-திரவியத்தை. பொருட்கு ஏங்கி-பொருளை இரவலர்க்குக் கொடுத்தலில் ஏங்கி. 26. முற்குறை-முன்னமே களித்ததாகிய குற்றம். 28. தம்பாலவரை-தம்மைச்சார்ந்தோரை. 30. பற்று-உடுக்கப் பற்றாத. கலை-ஆடை.

36-7 இவ்வடிகளிற் பந்திவஞ்சனைக் குற்றம் கூறப்படுகின்றது.

[பி-ம்.] [1]பொசியா. [2]நோற்போ ராகியும். [3]விரும்பினர்க் கொன்றும். [4]இவ்வா றிழிதலும்.

நீரிடை முளைத்த நெருப்பின் கொழுந்தென
வெண்டிரைக் கங்கையிற் செஞ்சடை பிறங்கக்
கூன்பிறைப் பிள்ளையுந் தேன்பொதி கொன்றையும்
பன்றிக் கோடும் பஃறலைப் பாந்தளும்
புதுநிணத் தலையு முதுகோட் டாமையும்
ஊன்கழி யென்பும் பூந்துண ராத்தியும்
பசுந்தளி ரறுகும் பானிற வெருக்கும்
இடையிடை தொடுத்த தொடைகிடந் தசைய
ஊழித் தீயெழுந் தாழியைக் குடித்தென
எல்லா வுயிரையு மொல்லையி னருந்தியும்
[1]நாவுறப் பசித்த மூவிலைச் சூலமும்
கண்டகார்க் கடலு மண்டத் தொகுதியும்
உடைபடக் குமுறுந் தமருகப் பறையும்
ஒற்றை யாழியி னேழ்பரி பூண்ட
மாயிருந் தேரி னாயிரங் கதிருடைப்
பன்னிரு கோடிப் பகலையுஞ் சீறி
மாருதங் குடித்து வடவையை விழுங்கிக்
காயெரி பரந்த தீவாய் மழுவும்
மாமுனித் தலைவ ரோமக் கனலிற்
கூடப் பிறந்த வாடற் புலியும்
யானையுங் கீழ்பட மேனிமிர்ந் துயர்ந்து
சென்னியிற் றரித்த திங்களி னிருந்து
கையிற் குதித்தமை காண்வா லூன்றிய
இருகா லுடைய வொருமான் கன்றும்

---

45–6. சடைக்கு நெருப்பின் கொழுந்து உவமை. 48. பஃறலை-பல் தலை. 49. முதுகோட்டாமை-ஆமையின் முதுகு ஓடு. 57. குமுறும்-முழங்கும். தமருகப் பறை-உடுக்கை யென்னும் வாத்தியம். 60. பகல்-சூரியன். 61. மாருதம்-காற்று. வடவை-வடவாமுகாக்கினி. 63. முனித்தலைவர்-தாருகாவனத்து முனிவர்கள். 64. ஆடல்-வெற்றி. 64–5. புலி யென்றதும் யானை யென்றதும் அவற்றின் தோலை. புலித்தோல அரையிலும் யானைத்தோல் மேலும் அணியப் பெற்றவை. 68. மான்கன்று திருக்காத்தி லுள்ளது.

[பி-ம்.] [1] நாவிற் பசித்த.

செம்மையிற் புணர்ந்த மம்மர்நோ யகல
நரபதி கூனும் சுரபதி சாபமும்
வெண்கரித் துயருங் கருங்களிற் றாற்றலும்
வலியான் பகையு மெளியேன் பிறவியும்
தொலைந்திட நோக்கி நலந்திகழ் கூடலின்
அளிமுரல் கடம்பிற் கிளியொடு வளர்ந்த
எம்பெரு மானை யும்பர்நா யகனை
வேண்டுநர் பேறும் வேண்டா வறிவிலர்
மாற்றரு மிழிவு மாதலிற்
போற்று திராஅ ராற்றலுடை யோரே. (எ)

## வெண்பா.

அ. ஆறுடைக்கு மந்நா ளறியா வழுதியர்கோன்
மாறுபட மண்சுமந்து வந்தியிடம்—பேறுடைய
பிட்டுக்காட் டாளும் பெருமையா னென்குறையும்
பிட்டுக்காட் டாளும் பிறர்க்கு. (அ)

## கலித்துறை.

கூ. பிறந்தீ ரறிவுடை மக்கட் பிறப்பிலப் பேறடைந்தும்
துறந்தீர் மதுரைப் பிரான்றாளை நீர்துறக் கங்கருதித்

---

69. மம்மர்-மயக்கம். 70. நரபதி-கூன்பாண்டியன். சுரபதி-இந்திரன்; சாபம்-விருத்திர ஹத்தி. 71. வெண்கரித்துயர்-வெள்ளையானையின் சாபம். கருங்களிறு-சமணர்விட்ட யானையினது. 72. வலியான்-கரிக்குருவியின். 71-2. பொருள் முரண். 74. கிளி-அங்கயற்கண்ணம்மை. 77. மாற்றரு-மாற்றுதற்கு அரிய. 78. ஆற்றல்-ஐம்புலனை அடக்கும் வன்மை.

வாழ்நாள் பெறுதல் (18) வேண்டுநர் பேறெனவும் (76), அழிதல் (44) வேண்டா அறிவிலர் (76) இழிவெனவும் (77) கொள்க.

அ. ஆறு-வையை யாறு. வழுதியர் கோன்-அரிமர்த்தன பாண்டியர். மாறு-பிரம்பு. பிட்டுக்கு ஆள் தான் ஆம்; ஆள்-ஏவலாள்; அடியார்க்கு ஆளாதலே ஒருபெருமை ஆதலின் பெருமையானென்றார். பெருமையானென்று இங்கே அமைத்தது மிகப் பாராட்டற்குரியது. பிட்டு-கூறுபடுத்தி; பிள்:பகுதி.

கூ. பேறு-இலாபம். தாளைத் துறந்தீர்-திருவடிகளை நினையா தொழிந்தீர்; துறக்கம் கருதித் துறந்தீர்.

திறந்தீர் தவங்களைச் சிந்தித் தடலையுஞ் சிவனையும்
உறந்தீர்கெட் டீர்பொற் கொழுவால் வரகுக் குழுதுழுதே. (௯)

அகவல்.

௧௦. உழுகருஞ் சேற்றுக் கழனியிற் பொலிந்த
சிறுமணி நெட்டிலைச் செந்நெற் பவளமும்
அரிதலைப் பெய்துதிர் விரிதலைத் தாழையுட்
பச்சிளந் தோட்டுப் பாளைவெண் டரளமும்
கருங்கமு கிறைக்கும் பசுங்காய்ப் பச்சையும்
செங்காய்த் திரளின் செம்மணிக் குப்பையும்
இசைந்தடை கிடக்கு மெகினவெண் டுகிலும்
விசும்பெனப் பரந்த வெண்டிரை வாவிச்
செந்தேன் குதிக்கும் வெள்ளிதழ்க் கமலம்
பொன்னிறக் கொன்றை சென்னியிற் சொரிந்து
பொற்றகடு நிறைத்த வெள்ளிச் செப்பென
மருங்குறு காவற் கருங்கனி சுமந்து
சாந்துவழித் திட்ட தந்தச் செப்பென
விரிநில வெறிக்குஞ் சுரிசங்கு கிடந்து
வெண்ணெயும் படிகக் கிண்ணமும் பொருவச்
செந்தா மரைமிசைத் தேமா நறுங்கனி

---

திறம் தீர்-நன்மைப் பகுதியின் நீங்கிய. உறந்தீர்-துன்புறுத்தினீர். உழுதுழுது கெட்டீர். பொற்கொழுவால் வரகுக்குழுத லென்பது ஒரு பழமொழி.

௧௦. 1-முதல் 20-வரை மருதநில வருணனை.

2. நெல்லாகிய பவளம். 3. அரி தலைப்பெய்து-வண்டுகள் சேர்ந்து. தாழை-தென்னை. 4. தோடு-தென்னையின் ஓலை. பாளையாகிய முத்து. 3-4. உதிர்தாளமென இயைக்க. 5. கமுகு-பாக்குமரம். பாக்கின் காயாகிய மரகத மணி. 7. எகின வெண் துகில்-அன்னமாகிய வெள்ளிய ஆடை. 9-11. கொன்றை மலரின் இதழுக்குப் பொற்றகடும், வெண்டாமரைமலர்க்கு வெள்ளிச் செப்பும் உவமை. 13. சாந்து-கருஞ்சாந்து. இட்ட-வைத்த. 14. சுரி-சுழிந்த. 14-5. சங்குக்கு வெண்ணெய் உவமை; "கண்ணன் காமும் வெண்ணெயும் போல ......தாமரை, உள்வளை யுறங்கும் வள்வாய்க் கூடல்" கல். 24:30-33.

வெள்ளிதழ்க் கமலம் (9) வெள்ளிச் செப்பெனத் (11) தந்தச் செப்பெனப் (13) படிகக் கிண்ணமும் பொருவ (15) வெங்க.

என்னம் மனைகாப் பொன்னம் மனையென
மன்னிய பாசடைப் புன்னையி னரும்பு
விரவுவெள் ளடிசின் மாகதத் தட்டென
ஒருதனிக் கவிகை மருத வேந்தனுக்
கிதமுற மதுரையாள் புதுவிருந் தளிப்பப்
பாரைச் சந்துங் காசலக் கோடும்
காளகிற் குறடுங் கோளரா மணியும்
ஒள்ளொளித் தாளமுங் கள்ளவிழ் மலரும்
விசைநடைத் தம்பியு மசைநடைப் பிடியும்
தெண்டிரைக் கவரியுங் கொண்டிரைத் தெழுந்து
பெய்புனற் றுகிலுஞ் சைவலக் கூந்தலும்
பொருகயல் விழியுந் தரள மூரலும்
உந்திச் சுழியுங் கொங்கைக் குமிழியும்
மெய்யிற் றரித்த வையைமா நதிப்பெண்
கொடியிடை துவளப் படிமிசை நடந்து
கார்க்கட விறைக்குக் கையுறை வழங்க
முசுக்கலைக் கொழுங்கி முகிற்குல மெழுந்து
கறையடிச் சிறுகட் கடாக்களிற் றினத்தொடு
வேற்காத் தாசர் போர்க்களத் தெய்திக்

---

17. அம்மனை-தாய்; என்றது அம்பிகையை. 16–7. மாங்கனிக்குப் பொன் அம்மனை உவமை. 18–9. புன்னையரும்புக்கு அடிசில் உவமை; அடிசில்-சோறு. 1-19. இவற்றிற் கூறப்பட்ட பொருள்கள் கையுறை. 20. மருதவேந்தன்—இந்திரன்.

22-முதல் 30-வரையில் வையையாற்றின் வருணனை.

22. சந்து-சந்தனமரம். காசலக்கோடு-யானைக் கொம்பு. 23. காள்-கருமை; காளமென்பதன் சிதைவு. குறடு-கட்டை. கோள்-கொலை. 24. ஒள்ளொளி-மிக்க ஒளி. 25. தம்பி-ஆண்யானை. 26. அலையாகிய கவரியும். 27. புனலாகிய துகில். சைவலம்-கொடிப்பாசி. 28. கயலாகிய விழி. முத்தாகிய பல். 29. சுழியாகிய உந்தி. குமிழியாகிய கொங்கை. 31. கொடியிடை—கொடியாகியஇடை; கொடிகள் நடுவிலே யெனவும் ஆம். 32. கார்க்கடவிறைக்கு—வருணதேவனுக்கு. 33. முசுக்கலை-ஆண்குரங்கு.

[1]கடிப்பிகு முரசொடு மிடிக்குரன் முழக்க
மகரவெண் டுகிற்கொடி வான்முகட் டகட்டுக்
கங்கை யாற்றிற் கயலெனப் புரள
அந்நதிப் புறத்தில் விண்ணவர் கடக்கும்
நாவாய்க் குலத்தைப் பாரெனத் தாக்கிக்
குருஉச்சுடர்ப் பருமணி குயிற்றுபொன் மேடைச்
சிகரக் குன்றொடு செய்குன்று திகழப்
பொருவருஞ் சீரிற் றிருவொடு வளர்ந்த
பொன்மதிற் கூடலிற் புகழொடு வளர்தோய்
நிறைபெறக் [2]கொடுத்துங் குறைபெறாச் செல்வ
மன்னுயி ரருந்த வற்றா வருட்கடல்
அறப்பயிர் காக்குந் திறப்போ ரேறு
மும்முலைக் கொடிபட ரைம்முகக் குன்றம்
அறுசுவை யழிக்கு நான்மறைக் கிழங்கு
மறிகட லழைத்த மாறாப் பொன்மழை
காய்விடங் குடித்துக் கனிந்ததெள் ளமுதம்
இனிப்பன வினியார்க் கினிக்குந் தீங்கனி
முக்கட் கடவுள் சொக்கநா யகநின்
பொன்னடிக் கமலப் புதுநற வருந்தி
நீங்கருங் களிப்பொடு தாங்கரு மின்பம்
எம்மையாள் கயல்விழி யம்மைநுண் மருங்குலும்
அடர்தன பாரமும் புரையக்
கடையனே னெய்தக் கருணைவைத் தருளே. (௧௦)

---

36. கடிப்பிகும்-குறுந்தடியால் அடிக்கப்பட்ட; இகுத்தல்-அடித்தல்; "முரசுகடிப் பிகுப்பவும்" (புறநா. 158.) 37. மகர வெண்டுகிற் கொடி-மீனக்கொடி; அது பாண்டியர்க்குரியதாதலின் ஈண்டுக் கூறப்பட்டது. 37-8. கொடி புரள. 40. பார்-வல்லிலம்; அது கப்பலை உடைப்பதன்று. 40-42. தாக்கித் திகழ. செய்குன்று-கட்டுமலை. 50. கடல்-எழுகடல். பொன்மழை-பொன்னைச் சொரியும் மேகம். 55-8. நூலாசிரியர்க்கு மருங்குலும், தாங்கருங் களிப்பிற்கும் இன்பத்திற்கும் அம்மருங்குலால் தாங்கற்கரிய தனபாரமும் உவமை.

[ஸ்ரீ-பி.] [1]கடிப்பிடுமுரசு. [2]கொடுத்துக் குறைபெறாச்.

### வெண்பா.

கக. கருணையந்தே னூறுங் கடம்பவனத் தெந்தை
அருணயந்தே னல்லேனு மானேன்—மாணத்
திருக்கூ டலைமதியேன் செம்பொனெயில் சூழ்ந்த
திருக்கூ டலைமதியேன் சென்று. (கக)

### கலித்துறை.

கஉ. சென்றேன மின்னமுந் தேடும் பிரான்றிருத் தாள்சுமந்து
நின்றேன் கவலை வெயிலாற் சடப்ப நிழலடைந்தேன்
என்றே னெடுத்த சடம்விழும் போதைக் கிடர்செயுங்கூற்
றொன்றேன் பலவெனி லேனெனக் கேன்பிறப் போடிறப்பே.(கஉ)

### அகவல்.

கங. இறவாத் தன்மைத் துறவோர் வேண்டப்
பிறவாது வந்து பிறந்தவர்க் களித்துப்
பல்லுயிர் காக்கு மெல்லையில் பொருள்
பொதுவிய லகற்றிச் சிறப்பியல் விரும்பி
அமுதநா டிருக்க வாலவா யுகந்து
மட்டவிழ் கொன்றையை விட்டுவேம் பணிந்து
விடைக்கொடி கிடக்கக் கயற்கொடி யெடுத்துத்
திருமுக மைந்து மொருமுக மாகி

---

கக. வனம் என்றதற் கேற்பத் தேனூறு மென்றார். திருக்கு ஊடு அலை மதியேன்-மயக்கத்தில் அலைகின்ற புத்தியை யுடைய யான். திரு கூடலை சென்று மதியேன்; கூடல்-மதுரை. மதியேனாதலால் அல்லேனுமானேன் என்க. நயந்தும் முயன்றேனில்லை யென்றபடி.

கஉ. ஏனம்-ஆதிவராகம். தேடும் தாள். ஒன்று ஏன்-ஒன்றாக இருந்தாலென்ன. பலவெனில் ஏன்-பல வடிவாக வந்தாலுமென்ன துன்பம் உளது. ஏன்-இல்லை என்றபடி.

கங. 1. துறவோர்-ஞானிகள்; சீவன்முக்தர்கள். பிறவாது வந்து-சுந்தர பாண்டியராக வந்து. பிறந்தவர்-மனிதர்கள். 4. சிறப்பிய லென்றது பாண்டி நாட்டைமட்டும் பாதுகாத்தற்குவந்ததுபற்றி. 5. அமுத நாடிருக்க ஆலவா யுகந்து என்பது முரண்.

## உ. புறநகர்வாழ்த்துச் சருக்கம்.

154 முதிராத முகிண்முலையா ளனுராகப் புணரியிற்போய்
முழுகா தொண்பொற்
கதிராழி வலத்தமைத்த கருணேசன் பேரின்பக்
கடற்கே மூழ்குஞ்
சதிராளன் பாசமய கேசரியாஞ் சமயபரி
பால னெங்கோ
னெதிராச னுறைந்ததிரு நகர்முதலாம் புறநகர்வாழ்
விசைப்ப துற்றேன். (க)

வேறு.

155 இந்திரன் புரந்த துறக்கமு நாகென்
றிகழ்ந்தயோ கீந்திரன் புரப்பச்
சந்ததந் தெவிட்டாச் சுவையொடங் காமந்
தருந்தமிழ்ச் சுருதிபா மமிர்துஞ்
சுந்தாத் திருமா லடியார் தேவர்
தொகுதியும் வாழ்தலாற் பார்மேல்
வந்துவீற் றிருக்கு மொருசுவர்க் கமென
வானவர் வழுத்துமாண் புடைத்தே. (உ)

வேறு.

156 ஐயாண் டினின்மை யெடுபிடித்
தறங்கற் பனகற் றருந்துதிபோன்
மெய்யா கியகற் புடையாளை
வேட்டே வேட்டும் வேட்பித்து
மொய்யா ரணியத் திடைத்துறவு
முற்றத் துறவும் விழைபவர்க்குப்
பொய்யா தருள்வ துணர்ந்துவனம்
புகுந்தார் களும்வந் தடங்குவரே. (ங)

வேறு.

157 கொவ்வையந்தீங் கனிமறந்து மருந்தாது கிளிமழலைக்
கூகூ வென்றே
கவ்வையொடு மிழற்றுது கருங்குயிலுங் கேசவா
கதியென் றல்லாற்

செவ்வழிகின் டியமழலைக் களியளியும் பணைமுருங்கைத்
தேப்பூ வுண்ணு
திவ்வழியே யெவ்வுயிருந் தவத்திநெறி வழுக்காத
வியற்கைத் தாமே. (௪)

158 பைங்கோதை முகிற்குழலார் மழவாகத் தனமெழுந்து
படர்கொம் பாய
வெங்கோபச் சிலைக்காமன் கொடுங்கோன்மை செலுத்தாது
விலக்கி வீங்கும்
பொங்கோதைக் கடல்கடைந்த குரிசின்மறைப் பொருளுரையாற்
புணர்த்த மும்மைச்
செங்கோன்மை யருட்பாம பாகவதர் நடத்தவளர்
செம்மைத் தாமே, (௫)

வேறு.

159 தொடித்துணைத் தடக்கைத் திருமகள் கொழுநன்
றுதியினைக் கேட்கவே செவிகள்
வடித்துரைத் திடலா நீலமா ணிக்க
வடிவினைக் காணவே விழிக
ளடிக்கடி வணங்கக் காமளித் ததொடு
மவனையே வலம்புரிந் தவன்முன்
னடித்திடும் படிநன் பதமளித் ததையு
நயந்துநன் பதமென நவில்வார். (௬)

160 யாக்கையே நிலையா தென்பதுற் றுணரா
வெய்திய நாள்கள்வீண் கழியா
தாக்கமே தழைதத் தவங்கண்மூன் றுணர்ந்து
மரும்பத நூல்விரித் துரைப்பார்
நோக்கமே தெளிதற் கிலக்கண மெனலாய்
நூல்வல்லார் நுவன்ற[1]வைந் திணையும்
போக்கியே யவற்றி னிடையமூர் தாதப்
புனிதநூற் புணரியுட் குளிப்பார். (௭)

---

[பு-ம்.] [1]வைந்திணையும், சா.

161 நித்தமீ தநித்த மிதுவெனத் தெளிந்த
ஞானம்வந் துறுதலா [1]விறைமேல்
வைத்தசிந் தையராய்த் துறவறத் தொழுகு
மாட்சியார் நிலையிலா தவற்றை
மெய்த்தவா வுளத்தாற் பிறந்திறந் துழல்வான்
வேண்டுமே ழையருயிர்க் கிரங்கு
முத்தம ருலகத் துருவெலாந் திருமா
லுருவமாய்க் கண்டுகண் டுவப்பார். (அ)

162 ஏதுவொன் றிலதாய்ப் பிறரிகழ்ந் திடினு
மிகழ்ந்திடா தவர்வெளிற் றினையப்
போதுகண் டயர்ப்பார் புறத்துள பொருள்போற்
போகமுந் துறந்துள மனத்தார்
பேதுசெய் தனவாய்ப் புணர்த்தபுன் கலைகள்
பிதற்றியே பித்தாய்ப் பிணங்கி
வாதுசெய் பரவா தியர்மத மழுங்க
மறைமொழி கொளுத்தும்வாய் மையினர். (கூ)

163 வேதமாம் புருடன் றத்துவ மனைத்தும்
விழுமிய திறத்துணர்த் துதற்கோர்
போதமுற் றிடவே யரியெனத் தழையும்
பொருளுரை யதனையே தனதா
மாதியந் தமுற வுரைத்தவுண் மையினு
லரியெனு மவனையே யல்லால்
யாதுமெய்ப் பொருள்வே றிலா வின்ப
மெய்துதற் கெனவுணர்ந் துரைப்பார். (௧0)

164 திருவிலாஞ் சனைசேர் துணைப்புயத் தினெடுந்
திருமணு லரிசனத் துகளாற்
சுருதிகாட் டியபோ லூர்த்தபுண் டரமாந்
தோற்றமே தகுநுதற் பொறியார்

---

[பி-ம்.] [1]னிறைமேல், சா.

பொருவில்பூ சுராராய்ப் பொறியிலா தவரே
பொறியிலா தவரெனப் புனித
மிருதிகூ றியதா மார்க்கமும் புராணம்
விதித்தமார்க் கமும்விரித் துரைப்பார். (கக)

165 மருந்தினைக் கடைநாட் சேணிடைச் சுரரை
மறக்கடு விடந்தொடர்ந் தெழவே
யருந்திய பொழுதக் கடுவான் கண்டத்
[1]தடுந்தொழில் புரிந்திடா தடங்கி
யிருந்தது மறையாஞ் சிறைபடைத் தவனே
டெம்பிரா னகத்திருந் தருந்தப்
பொருந்திய தெனவா தியர்பிணக் கறமெய்ப்
புராணம தெடுத்துறத் தெளிப்பார். (கஉ)

166 கொற்றவன் புரத்தொ டிகல்புரிந் திடுநாட்
குவலய மிடிந்து தாழ்ந் திடவே
கற்றவர் புகழ்ந்த வரியினு வேசக்
கபிலமா முனிவான் றனதா
யுற்றதோர் மருப்பாற் றரித்ததை யரியென்
றுணர்த்துவீ ரண்டகோ டிகளை
மற்றவன் கமட வடிவமாய்ப் பரிப்ப
வரம்பிலா வுலகமோ டனைத்தும். (கங)

167 பரித்தது மைமையதா லானையே யொழிந்த
பல்லுயிர்ப் படிவமோ பரித்தான்
றரிப்பதோர் காவற் றொழில்புரி வதுவுஞ்
சாய்ந்துளார் தம்மையே தாங்க
லுரித்தவன் றனக்கென் றுணர்கிலீர் தெருட்டு
முண்மையைச் சுருதியின் வழியாய்
விரித்திடும் புராணத் துணர்ந்திடு மெனவே
மேதகத் தெருட்டும்வாய் மையினர். (கச)

---

[பி-ம்.] [1] தடுதொழில், சா.

168 திசைமுகத் தவனுந் தானுமோர் காம
தேனுவுங் கன்றுமா மெனமெய்
யிசைதரும் படிக்கத் திரிபுரத் துள்புக்
கிறுதியை யளித்திடா வமிர்த
வசையிலாக் கூவல் வறந்திட முழுது
மாந்தின ராகிமற் றவர்மே
னசையிலா தவரா யானிடத் துசித
நசையினைப் புரிந்ததுந் தெருளீர். (கரு)

மூன்றுந் தொடர்.

169 அடுக்கிய தொழில்கண் மூன்றுமே தனுதென்
றுக்குதற் கமர்பாற் செறிந்த
விடுக்கணைக் களைக ணுந்தெச ரதன்சே
யெனவுதித் திருபது கரனைத்
திடுக்கிடும் படிகொன் றிடும்பழி தொடாத்
திரிசடைப் பகவனை யுவர்நீர்
மடுக்கரை யினில்வைத் தருச்சனை புரிந்தான்
மனுகுல ராமனென் றுரைத்தீர். (கசு)

170 இக்கதை வருமுன் புரைத்தவான் மீகத்
திவ்வுரை கேட்டில மெரிக்கு
முக்கணு னன்கு முகத்தினன் சிரத்தை
முடித்தரான் முடித்தலை யகலா
தக்கரத் திரத்த லதனைநா ரணமா
முனிவனு லகற்றலு மதன்பின்
புக்கிடத் தினிலப் பழிதொடர்ந் திடவே
பொங்குநீர்ப் பகிரதி வடபால். (கஎ)

171 வேதவான் சிரத்து மாதவன் பதிந்த
மேதகு காசிசென் றணுகப்
பாதக மணுகா தகன்றதா லானிப்
பழம்பதி யகற்றிய தெனவச்

சிதாற் பணிந்து நினதுநன் பதியாற்
தீர்ந்ததென் பாதக மெனலு
மாதா வுடனின் கயிலைமால் வரைமீ
தடைந்தினி துறைதியென் றருள. (கள)

172 எழுதரு மளவி லகன்றபா தகம்பின்
பிடித்தலு மீண்டுமா தவனைத்
தொழுதன னகன்ற பாதக மகலத்
தொடர்ந்ததா லகல்வதன் றுவந்திப்
பொழுதிவ னளித்தி யெனப்புரந் தருள்மெய்ப்
பொருள்பிர யாகையி லதன்பின்
கெழுதகை யுடன்சென் றுறைதலுஞ் சிவன்றன்
கிளையொடுங் காசியி லுறைநாள். (கக)

173 பார்புகழ் முனிவ ரிட்டகா மியத்திற்
பற்றில ராகிமுத் தியையே
சேர்தரத் துதிப்ப துணர்ந்துநான் முகனைச்
சிந்தைசெய் திடவவ னளித்த
தாரகப் பிரமந் தன்னையந் தியத்திற்
சாற்றியா வருக்கும்வீ டளிக்கை
நாரதீ யமெனும் புராணமா தியதா
நவிலுமென் பதனையே யிசைத்தும். (உ0)

174 கண்டமா னதுசேர் காதினு னெற்றிக்
கண்ணனை முத்திகேட் டருள
வண்டர்நா யகன்மேற் பதவியென் பொருட்டா
லளிப்பதற் கரிதென வவனும்
பண்டைநான் மறைதேர் வேள்விவே தியனைப்
பாதகா ணிக்கைவைத் திறைஞ்சக்
கொண்டவன் பழியுங் கெடுத்துமுத் தியையுங்
கொடுத்தலுங் குறிக்கொளீ ரதன்மேல். (உக)

175 ஆகமம் புணர்த்த நின்னேர் யிறையென்
றறைகநிற் பரவுது மெனவே
மோகமா யுரைத்த துளதெனப் புராண
மொழிந்ததா லாசிய னடாத்தும்
பாகமே பயில்வான் முனிவரைப் பணியும்
பான்மைபோற் பணிவதொன் றெனலா
மேகநா ரணன்றன் மாயையா ரறிவா
ரென்விருட் டறத்தெளித் துரைப்பார். (உஉ)

ஏழுந் தொடர்.

176 நாவிரண் டிரட்டி யாயிர மெனவாழ்
நங்கைமார் வயின்வயி ளொருபான்
பாலரைப் புரந்தா ளொருபுதல் வனையோர்
பாவைபாற் புரப்பதே யரிதாய்
வேலனைத் துதிக்கை முகத்தனைப் பயந்த
வேணியான் றனைப்பா வுதலான்
மாலொரு மகப்பெற் றனனெனப் புராணம்
வடித்தெடுத் துரைப்பதுண் மையதால். (உ௩)

177 சாந்திபன் கலைக ளளித்ததெக் கணக்குச்
சகரவெண் டிரைக்கருங் கடலுண்
மாய்ந்தமைந் தரையும் புரந்தவற் கதன்முன்
வைதிகன் மைந்தரை மறைத்தே
யேய்ந்தவான் பதம்புக் கவ்வவ பருவத்
தீந்தவற் கிருந்தையை மகவென்
றுய்ந்தளித் தவற்கு மருமையோ விஃதென்
றையமு தறவகுத் துரைத்தும். (உ௪)

178 உகத்தினை யொருங்குண் டோங்குபே ருதரத்
தடித்ததோ ராலிலைத் தளிசி
னகத்தடங் கியபைங் குழவியாய்ச் செகத்தை
யமைத்தரு ளயனையீன் றவனுன்

மகற்புரங் தவற்கே யரியதாய் வாத்தான்
மகப்புரந் தனனெனு மயக்குஞ்
செகத்தினை மயக்க வரம்பெறு வதெனத்
தெள்ளிதி னிருட்டறத் தெளிப்பார். (உரு)

179 பழிபுணர் படிமப் பவுண்டான் பாசு
பாணியை வழிபடு வதற்குக்
கழிகவின் கமல மாயிரம் புனையுங்
காலையோர் கமலமற் றதனால்
விழியினை யிடந்து புனைதலும் விடையோன்
வெளியுறீஇ வேண்டிய தெவனென்
றொழிவற வினவ வாசுதே வனென
வுரைத்திடு நாமமோ டுவணன். (உசு)

180 அடுசுடர்ப் பருதி யாடகாம் பரத்தோ
டவன்விரும் பிபவனைத் தினையும்
கொடுவிறற் கணநா தரிற்படைத் தருளக்
கொண்டவன் றுவாரைமா நகரை
முடுகியே யமர்செய் வேலையின் முகுந்தன்
மொழியுமுன் குறித்ததே முடித்துக்
கடுவிரல் பெருக்கு மெண்ணிலா தவர்போற்
கதிர்விரி திகிரியோன் றினையே. (உஎ)

181 பணங்குலா வரவப் பணியணி கலுழன்
படர்வரைப் புயத்தின்மீ தேறி
யணங்கினோ டெதிர்ந்த பவுண்டான் றலையை
யறுத்திடு செனப்பணித் தெறிய
வணங்குவார்க் கருள்செய் கண்ணனெம் பெருமா
னிணையடி கனாயிரு பொழுதும்
வணங்கிடாத் தலையைப் பிடுங்கியே காசி
வளப்பதி வாயிலிற் கோடுபோய். (உஅ)

182 இட்டமெய்க் கதையைத் தேவகி பயந்த
வெம்பிரான் வாசுதே வனெனக்
கட்டுமிக் கதையெக் கதைசொலும் விசயன்
கதழ்பரித் தேரின்மேல் வணங்கி

மட்டவிழ் துளவத் தவன்பதத் தணிந்த
மலரான் சென்னிமேற் கண்டச்
சிட்டனுற் றுணர்ந்த தன்மையு மனத்துட்
செலுத்தியே யிருட்டறத் தெளிப்பார். (உகூ)

வேறு.

183 நாளென் பதையு மூழ்வினையு
நடுக்குற் றுணர்ந்தா ருயிரினையீர்
வாளென் பதுடன் முறைபிறழா
வகைத்தென் றதனு லடிப்படவே
கோளென் பதுரு தரிசுமவென்
றுரைத்தார் புலவுட் குரம்பையுட்புத்
தேளென் பதிற்போய் [1]மீணெறியுஞ்
செறுத்தார் நமனை யொறுத்தாரே. (கூ0)

184 யாமென் றுளதோ வெமதெனவே
றியற்றப் படுவ தெவனுளதந்
தாமம் புரந்தா யெமைப்புரந்த
தலைத்தண் ணளிகட் குபகார
மாமென றுணரி லதுசரணு
கதியென் றரியா தியபெரிய
நாமம் பகர்வா ரவர்தமைப்போ
னயந்தா ருறுதி பயந்தாரே. (கூ.க)

வேறு.

185 மூந்தவுலோ காயதனென் றொருபேர் தந்தோன்
முத்தியருந் தலும்புணர்வு மென்றே மாயைத்
தொந்தவினைக் கடற்புகுந்து மனைவி யார்நீர்ச்
சுழியினிலாழ்ந் துறமதலை முதலை வாய்ப்பட்
டிந்தவுடல் கழிந்தினும் பிறவி யென்றே
யெய்துபெரும் புறக்கடலு ளழுந்து மந்தோ
சந்ததமும் பாமபதத் தேற்றப் பூதூர்த்
தனிமதலை யிருப்பவென்னுந் தன்மை யாரே. (கூ.உ)

[1] 'மீனெறி' என்று பிரதிகளிற் காணப்படுகிறது.

186 வெண்ணுரைத்தெண் ணறவருந்திப் புல்வுப் பேழ்வாய்
வெறிச்சுவடு பிடித்தளிவீழ்ந் துலம்ப ஞானக்
கண்ணுரைபோய் மானமழிந் தயர்வு தோய்ந்துங்
கடவுளைக்காண் பதற்கிருந்த வரமப் பேயைப்
புண்ணுரைவெந் திறலாழிப் பொருளை யேகட்
புலங்கொளத்தீ தறுஞான போத மூட்டும்
பண்ணுரைதோய் தமிழ்மறையின் றுறைக்கே மூழ்காப்
படிற்றொழுக்கங் கண்டிரங்கும் பான்மை யாரே. (௫௫)

187 கொல்லாத விரதநிலை யுடையேம் யாவுங்
கொன்றுதரிற் றின்றுதிரி குணத்தே மென்றே
பொல்லாத விரதநிலை படைத்து மைந்து
புலனவித்தே மெனும்புத்தப் புதுப்பேய் தன்னை
வில்லாது னெனில்யாதுங் கோறல் யாரே
விலைப்படுநின் பொருட்டினிலென் றன்றோ கொன்றார்
கல்லாதாய் நீகொலையும் புலனுங் காத்த
கருத்தெவனென் றேதெருட்டுங் காட்சி யாரே. (௫௬)

188* முழுக்கலையற் றரைக்கலையு மிழந்தாய் தோகை
மூருங்கூறுமீ வியின்முழுது முன்றில் சீக்கு
மொழுக்குறநின் றனையுடையு மஃதே யாறு
யுன்விரத மெதுபெயரே துரைத்தி யென்று
வழுக்கறவே யியங்குயிர்கொல் லாமை யாசீ
வகனுக விறைவன்யா [1]சருக னில்யா
திழுக்கியல்பின் றுந்தனியூர் யாது செம்பொ
னெயிலெனவவ் வெயிலெவனென் றிசைத்து மீட்டும், ( )

189* எப்படிவந் தோன்றியதப் படிவத் தெல்லா
மின்னுயிருண் மையையுணரா யியங்கற் பால
வப்படிவந் துயிருளது யுணர்ந்தா யீசற்
கருத்துமுனை யினிலருத்தி யறத்திற் கேற்ற

[பி-ம்.] [1]சருகனில்யா திழுக்கியல். சு. மா.

துப்புரவுண் பதுகடனென் றுள்ளா யாகத்
[1]தொழிலிழந்தாய் சுடர்ச்சொருபாம் வேத மார்க்கந்
தப்பினையெம் மறைகொடுசா திப்ப தென்றே
[2]சமண்மதமே பழித்தழித்து முழுதுஞ் சாய்த்தார். (நசு)

இரண்டுந்தொடர்.

190* அற்புதமா மன்னுயிரே பிரம மென்று
மலகிலவன் றென்றெனவு மலகில் யாக்கை
நிற்பனயா தெனிற்புனல்பெய் [3]குடங்க டோறு
நிழற்கதிர்தோன் றியநெறித்தா [4]மென்று மங்ஙன்
பொற்பனவொன் றிறத்தலுமே னையவும் பொன்றுப்
பொலிவெவனென் றுலவைபோ லெனவு மாறிக்
[5]கற்பனசெய் பவன்றனைநான் பிரம மென்றே
கழறுமிரண் டெவனெனவே கழறி மீட்டும். (நஎ)

191* நான்பிரம மென்றனைநீ பிரம மாகி
நான்முகனை யுந்தியிற்பெற் றிடுதி பொன்று
வான்பிரம மமைத்தபகி ரண்ட மெல்லாம்
வயிற்றிடைவைத் திடுதிசது முகத்தால் வையந்
தான்[6]புரந்த வுலகினைமூ வடியிற் றூய
தனுவினனே ரணுமயமாந் தனுவுங் கோடி
யூன்பயின்ற குரம்பையைநீத் துலக மெல்லா
மொருங்கெறிக்குஞ் சுடர்மயமா முருவுங் கோடி. (நஅ)

192 *ஆயிரவாய்ப் பஃறலைப்பாம் பணைமேற் காவ
லறிதுயிலுங் கொண்டிடுதி யனந்த னாகி
மாயிருஞா லங்களொரு பத்து நாலு
மணிமுடிமேற் றரித்திடுதி வழிந்து நாளுந்
தாயதிரைப் பாற்கடலைத் தயிரே யாக்கிச்
சந்திரனை மந்தரமேற் றறிய தாக்கித்
தூயசுவைத் தெள்ளமிர்த நரர்க்கும் விண்மேற்
சுரர்க்களித்த தெனவளிக்குந் தொழிலுங் கோடி. (நசு)

---

[பி-ம்.] [1] தொழிலிகழ்ந்தாய். [2] சமண்மதத்தைப் பழித்தனரா யழித்துச் சாய்த்தார். மா. [3] கடங்க. [4] மெனவு. சா. [5] கற்பனை. மா. [6] புரந்தவ். மா.

193 *எண்ணிறந்த நால்வகைத்[1]தோற் றத்துள் ளாய
வெழுவகைத்தாஞ் செனனமுநீ யிசைந்து பின்ன
ரெண்ணிறந்த விடங்கடொறு நிற்ப தோடு
மியங்குதியிம் மிவையன்றி யேக காலத்
தெண்ணிறந்த தொழில்புரிதி யண்ட ரண்டத்
திவ்வுலகிற் [2]பாதாலத் தின்பத் துன்ப
மெண்ணிறந்த [3]விவர்க்கிவற்றிற் கிசைந்த தென்றென்
றிசைந்ததிறம் [4]வாய்மையவா யிசைப்ப தோடும் (சo)

194 *இவ்வுடலத் திறத்திபிறந் திடுகா யத்தை
யீமத்தங் கிடுபொழுதி [5]னிறந்தி டாதே
யவ்வுடலத் தடனெழுந்த வருதி காயத்
[6]தருவருப்பா கியமலமூத் திரங்களெய்தாச்
செவ்வியின்வாழ்ந் திடுதிநரை திரைமூப் பில்லாச்
சிறப்பினெடும் வளிமுதலாச் செறிந்த மூன்றும்
வவ்வுதலற் றீறில்சுகா னந்த மேய
வச்சிரகா யம்புணர்ந்த வாழ்வி னேடும். (சக)

195 *மின்னுயிர்க்குங் கனகன்[7]வின வியபொற் றூணம்
வெடிப்பவுதித் தடித்தகரம் பிடித்தல் போல
வுன்னுயிர்கொண் டெனதுகரம் பிடித்த தூணத்
துறுதியிவை முதலவுனக் குறுவ தின்றூன்
மன்னுயிர்தா மலகிலவாம் வகையு மீசன்
வாழ்வகையு முணர்ந்திலையுன் மத்த னுனைய்
இன்னுயிர்வே றின்னுயிர்கட் குயிராய் நின்ற
விறைவனும்வே றெனத்தெளிவித் திதஞ்செய் வாரே. ()

இவை யாறுந் தொடர்.

196 தாதார்ந்த [8]பசுந்துளவத் தெம்மாற் கன்பு
[9]தழைபவர் பூம் மைப்பதம்போய்த் தன்னுள் ளாகி
மூதார்ந்த திருவுருவங் தெரிசித் தொனூ
முத்திநையப்பெற் றிருப்பரென மொழிவ தல்லா

[பி-ம்.] [1]தோற்றத்துளாய. [2]பாதாளத். [3]விவற்கவற்றிற். [4]வாய்மையதா. [5]லெரிந்திடாதே. [6]தருவருப்பாக்கிய. மா. [7]வினவின. மா. [8]நறுந்துளவந். சா. [9]தழைப்பவர். சா.

ஞதாந்த வொளியிஞெடு மொன்று மென்றே
நாயனடி மைத்திறம்போய் நசையொன் றில்லா
வேதாந்தி யெனவனந்த போக நீத்த
வெறுஞானி விழும்படுகர் வீழா தாரே. (சங)

வேறு.

197 வானமு மதன்கீழ் வையமும் புரக்கும்
வாழ்வுவந் தறிஞுநல் குரவின்
றூனமென் றிகழ்வா ரிறைநிலை யுணர்த்துஞ்
சத்திய மறைத்துணி வுணர்ந்த
ஞானமே யழியா வுயர்வற வுயர்ந்த
நலனுடைச் செல்வமென் றுணர்ந்தா
யானென தென்னுந் தொந்தநீத் தகன்றூர்
யாவர்மாட் டினுமிதம் பகர்வார். (சச)

198 உலகெலாந் தமதே வலின்வழி படநின்
றேக்கியைம் பொறிகள்சே வகமா
பலகிலா முகத்தோ டிலவுமைம் புலனு
மாடன்மால் யானையைத் திளையு
மிலகுமெய் யுணர்வாந் தோட்டியா லடக்கி
யினிதுவீற் றிருந்திடா யோக
மலர்கொள்கை யினராய் மலர்மக ளகலா
மார்பனை வழிபடு மனத்தார். (சரு)

199 இனியவை கூறல் வாய்மையந் பொழுக்க
மீகைகொல் லாமைசால் பமைதி
புனிதனோன் பொறைமெய் யுணர்ந்தவா வறுத்தல்
பொறிவழி புகுந்தறி வழிக்கு
முனிவரும் புலனைத் தவிக்குமாண் பவற்றின்
முகுந்தனோ டனுபவித் திருக்குந்
தனிநிலை பெறலா லொடிவில்பே ரின்பச்
சலதியூ டாடும்வாழ் வுடையார். (சசு)

200 புனிதமாய்ப் புனைபூண் டிருவிலாஞ் சனையும்
பொற்புடைத் திருமணு நாவிற்
கினியதெள் ளமிர்தாய் மிசைவதுஞ் செவிகட்
கிசைவதுந் தமிழ்மறை நாவற்
கனியினைப் பழித்த கரியமா ணிக்க
மேனியே காண்பதுந் துளவப்
பனிமலர் சூடிக் களித்ததே நாசிப்
பரிமள மெனவுயிர்த் திடுவார். (சஎ)

வேறு.

201 வேதாந்த முதலரிதா ளடியி லன்பை
வித்தியபின் றுறவறமாய் விதித்த பான்மை
மூதார்ந்த மெய்த்தவநீர் பொழிந்து வாழ்நாண்
முழுதுணர்ஞா னங்குரமே முன்னி யாறு
தீதார்ந்த காமாதி விலங்கு றாதே
திகழ்சாந்த வேலியினாற் சேமித் தாதி
நாதாந்த முதல்பரந்தா மத்து ளாய
நன்போகம் விளைத்திடுநா கரிகத் தாரே. (சஅ)

202 ஞானவடி வென்பதும்யான் பிறிதின் றென்றே
நான்மறைகற் றடங்கானான் முகன்றன் மேன்மைத்
தானமழுங் குதற்குமறை கொடுபா தால
சலிலமுறு மதுகயிட வன்மார் தம்மை
மீனவடி வாய்மலைந்தே கொணர்ந்த வேதம்
வேதாவின் றுதிக்கிரங்கி மீட்டுஞ் சூட்டுப்
பானிறவெள் ளோதிமமென் றளித்தான் செம்பொற்
பதுமமல [1]ரிணையடியே பணிவா ரன்றே. (சகூ)

203 †தாழிதடங் கடலகடா [2]யுறைபத் தண்ணார்
தளிதருதீம் பாறயிராய்த் தலைப்பெய் [3]தோங்கும்
பாழிநெடுங் கிரியெனுமந் தாமத் தாகப்
படநாகம் வடமாகப் பரந்த தேவர்

---

[மூ-பா.] [1]ரடியிணையே. ச. [2]யொலிக்கும். [3]கோவாப். பா.

[1]வாழியெனத் தெள்ளமிர்தங் கடைநா ளாழ்ந்த
வயிரவரை யினைக்கமட வடிவா யேந்து
மாழிபுனைந் தெழுதடக்கைப் பெம்மான் றொண்டர்க்
கடியவரா நிலைமையரென் னடிக ளாவார். (ருo)

204 ஏடுபிறங் குயர்தருநா டளவும் வேத
னிருந்துயில்கொள் பொழுதெழுநீர்க் கிளது மண்டம்
பீடுபிறங் கிரணியன்முன் னவனு லாழ்ந்து
பிலம்புகவே முடங்குழுளைப் பிறைம ரீஇய
கோடுபிறங் கெழிற்கேழ லுருவா யன்றக்
கோளவுணன் முரண்முருக்கிக் கொள்ளை வெள்ளத்
தூடுபிறங் கியதிருவைக் கொணர்ந்தே ஞான
முணர்த்துமுழு முதற்சொருப முணர்த்து வாரே. (ருக)

205 †வெற்றாணென் றிசையாது சரவா மூவா
விழுமருந்துண் டொண்டுறக்க மேய்வா னேரைச்
செற்றாணென் றிசைகனக னிங்கு ளானே
சிறுவவென மதுகைநர சிங்க மாகிப்
பொற்றாணெட் டகடுகிழித் தவன்ற னாகம்
போழ்ந்துகிரா லளைந்துகுடர்ப் புண்ணீர் மாலை
கற்றாணம் பொருவுதிர டிண்டோள் வேய்ந்த
கருணைவரைக் கடிமை[2]செய்யுங் காட்சி யாரே. (ருஉ)

206 மாவடியுண் கண்ணதிதி யன்பால் வானோர்
வாத்தினொரு குறளாய்மா வலிபாற் சென்றே
மூவடிமண் டருகவென்று வுதகம் பெய்யு
முழைதடுத்த புகரினைக்கண் முருக்கி மூவாத்
தோவடிவங் கொளக்குறளா யளித்தி யென்றே
குறிமூசைக் கோன்றண்ட கோள முட்டச்
சேவடிநீட் டியகுழகற் கடிமை செய்யுந்
திறத்தினரிங் கவரேயென் றெய்வ மாவார். (ருங)

---

[பிரதி.] [1]வாழியிருந். பா. [2]செயுஞ். பா.

207 முந்தியம தக்கினியாந் தாதை யீன்ற
முதற்றாயைப் புனற்றிரளா முறைமை நாடிச்
சிந்தையினென் றிவளுயிரைச் செகுத்தி டென்னச்
செகுத்தவனு லவளுயிரைத் திரும்ப வீந்த
தந்தையைக்கொல் கார்த்தவீ ரியன்மு வேழு
தலைமுறைகொன் றிழிகுருதிப் புனலின் மூழ்கி
யந்தநிட்டை செய்ததிறற் பாசி ராம
னவன்றன் னடியவரென் னடிக ளாவார். (௫௪)

208 †தேனிலங்கும் பைந்தாம மாலை மார்பிற்
றெசரதனன் மகவாகித் தின்கான் மேவி
வானிலங்கோ ளேழுமா மரமும் வாலி
மார்பகமு மிலங்கேசன் மவுலி பத்து
நானிலத்தன் றிழிதரவோர் வாளி தூவி
நன் னுதலா ளுடன்கூடி யிளவ லென்போன்
றானிலங்கா [1]புரிபுரக்க வளித்த வென்றித்
தனுராமன் றனக்கடிமை தழைந்து ளாரே. (௫௫)

வேறு.

209 வேதமுத லாகம புராணவகை மாமுனிவர்
மேதகவு கூரவடைவே
வாதனைசெய் யாகயிமி சாரணிய மேவியுறை
மானபா னுமெனவும்வாழ்
சூதபவு ராணியனை மேதைகெட வேவதைசெய்
சோதியளி மூசியதுழா
யாதியொழி யாதவருண் மாரிபெல தேவனடி
யார்களடி யார்களவரே. (௫௬)

வேறு.

210 முருந்தேறு முகிணகைமெல் குமுதச் செவ்வாய்
முரிபுருவ முழுமதிய முகத்து னீண்ட
பருந்தேறு சுடர்வேற்கட் குடவர் மாதர்
பைந்துகிலைத் தொழுனையின்வாய்ப் பாந்து வாரிக்

[தி-பி.] [1]புரம்புரப்பக் களித்த வென்றித், பா.

# மதுரைத்தமிழ்ச்சங்கத்தில் விற்கப்பெறும் புத்தகங்கள்.

## சங்கப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஞானாமிர்த மூலமும் உரையும் ... ... | 1 | 0 | 0 |
| 2. | சைவமஞ்சரி ... ... ... | 1 | 8 | 0 |
| 3. | யாப்பணியிலக்கணங்கள் ... ... ... | 0 | 10 | 0 |
| 4. | வைத்தியசாரசங்கிரகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 5. | பன்னூற்றிரட்டு ... ... ... | 3 | 0 | 0 |
| 6. | மகாபாரதம் அரும்பதவுரையுடன் ... ... | 4 | 0 | 0 |
| *7. | தோத்திரத்திரட்டு ... ... ... | | | |
| 8. | தமிழ்ச்சொல்லகராதி உயிர்வருக்கம் முடிய. முதற்பாகம். | 6 | 0 | 0 |
| | ஷை இரண்டாம்பாகம் ... ... ... | 4 | 8 | 0 |
| | ஷை மூன்றாம்பாகம் ... ... ... | 5 | 0 | 0 |
| 10. | தொல்காப்பியம் செய்யுளியல் (நச். உரை முதலிய) ... | 1 | 12 | 0 |
| 11. | திருவருணைக்கலம்பகம் ... ... ... | 0 | 6 | 0 |
| 12. | அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் ... ... | 0 | 8 | 0 |
| 13. | கலைசைச்சிலேடைவெண்பா ... ... ... | 0 | 5 | 0 |
| 14. | தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி ... | 1 | 4 | 0 |
| 15. | திருவாரூர் நான்மணிமாலை ... ... ... | 0 | 4 | 0 |
| * | சங்கப்புலவராற்றுப்படை உரையுடன் ... ... | | | |
| | பன்னூற்றிரட்டு (செலக்ஷன்) ... ... | 0 | 4 | 0 |
| | திருவாலவாய்த் திருநீற்றுப்பதிகம் முதலியன ... | 0 | 1 | 0 |

## செந்தமிழ்ப்பிரசுரம்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஐந்திணையைம்பது உரையுடன் ... ... | 0 | 3 | 0 |
| 2. | கனாநூல் (5) இனியவைநாற்பது (உரையுடன்) ... | 0 | 3 | 0 |
| 4. | புலவராற்றுப்படை ... ... ... | 0 | 3 | 0 |
| 6. | நேமிநாதம் (உரையுடன்) ... ... ... | 0 | 12 | 0 |
| *7. | திருநூற்றந்தாதி (உரையுடன்) ... ... | | | |
| 8. | திணைமாலைநூற்றைம்பது (உரையுடன்) ... | 0 | 8 | 0 |
| *9. | அநுமானவிளக்கம் ... ... ... | | | |
| 10. | அட்டாங்கயோகக்குறள் ... ... ... | 0 | 2 | 0 |
| 12.* | பன்னிருபாட்டியல் ... ... ... | | | |
| 13. | நான்மணிக்கடிகை (பழைய உரை) ... ... | 0 | 4 | 0 |
| 14 | முத்தொள்ளாயிரச்செய்யுட்கள் ... ... | 0 | 2 | 0 |
| 15. | திருச்செந்திற்கலம்பகம் ... ... ... | 0 | 3 | 0 |
| 16. | திருவாரூருலா ... ... ... | 0 | 8 | 0 |
| 17. | சுகசந்தர்சனதீபிகை ... ... ... | 0 | 12 | 0 |
| 18. | இயற்கைப்பொருட்பாடம்... ... ... | 0 | 4 | 0 |
| 19. | தேவையுலா ... ... ... ... | 0 | 3 | 0 |
| 20. | நரிவிருத்தம் ... ... ... ... | 0 | 2 | 0 |
| 21. | சிதம்பரப்பாட்டியல் (உரையுடன்) ... ... | 0 | 8 | 0 |
| 22.* | திருக்கலம்பகம் (ஷை) ... ... | | | |
| 23.* | விக்கிரமசோழனுலா ... ... ... | | | |
| 24. | குருமொழிவினாவிடை ... ... ... | 0 | 1 | 0 |
| 25. | கேசவப்பெருமான் இரட்டைமணிமாலை... | 0 | 2 | 0 |
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் ... ... | 0 | 1 | 0 |
| 27. | மதுரைத்திருப்பணிமாலை ... ... | 0 | 8 | 0 |

| | | | | |
|---|---|---|---|---|
| 28.* | சந்திராலோகம் ... ... ... | | | |
| 29. | சோழவம்சசரித்திரச்சுருக்கம் ... ... | 1 | 0 | 0 |
| 30. | ஞானமிர்தக்கட்டளை ... ... ... | 0 | 3 | 0 |
| 31. | பாண்டியம் ... ... ... ... | 0 | 4 | 0 |
| 32. | மநீஷாபஞ்சகம் ... ... ... | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு ... ... ... | 0 | 8 | 0 |
| 34. | அகப்பொருள்விளக்கம் ... ... ... | 1 | 4 | 0 |
| 35.* | திருமந்திர நூறுபாட்டுக்குரை ... | | | |
| 36. | உவமானசங்கிரகம் ... ... ... | 0 | 1 | 0 |
| 37. | மாறனலங்காரம் மூலமும் உரையும் ... ... | 4 | 8 | 0 |
| 38. | திருப்புல்லாணிமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 39. | பழமொழி மூலமும் பழையஉரையும்(முதல் 100 செய்) | 1 | 0 | 0 |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் ... | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு ... ... ... | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு ... ... ... | 0 | 12 | 0 |
| 43. | மேகவிடுதூது ... ... ... | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை ... ... ... | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் ... ... ... | 0 | 4 | 0 |
| 46. | இராமோதந்தம் ... ... ... | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் (2-வது 100செய்) | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடுந் தமிழும் ... ... ... | 0 | 6 | 0 |
| 49. | கடைவள்ளலார்காலம் ... ... ... | 0 | 6 | 0 |
| 50. | தமிழரும் ஆந்திரரும் ... ... ... | 0 | 4 | 0 |
| 51. | மதங்கசூளாமணி ... ... ... | 1 | 0 | 0 |
| 52. | கூடற்புராணம் ... ... ... | 0 | 10 | 0 |
| 53. | திருவள்ளுவர் ... ... ... | 0 | 6 | 0 |
| | ஷை. ஆங்கிலத்தில் ... ... ... | 0 | 6 | 0 |
| 54. | அரும்பொருள்விளக்க நிகண்டு ... ... | 1 | 4 | 0 |
| 55. | மாறனகப்பொருளும் திருப்பதிக்கோவையும் ... | 0 | 12 | 0 |
| 56. | பாப்பாவினம் ... ... ... | 0 | 10 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:-1. சங்கத்தினின்று மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களைக்கொண்டு வெளியாகிவரும் "செந்தமிழ்"ப் பத்திரிகைக்கு வருஷச் சந்தா ரூ 4. தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷச் சந்தா ரூ 4—8—0. இதுவரை 29 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன. இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை. பைண்டு செய்யப்பெறாததொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—0—0-வீதமும், பைண்டு செய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—12—0 வீதமும் விற்கப்பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம், செந்தமிழ்ப்பிரசுரம், செந்தமிழ் முழுத்தொகுதி— இவற்றுள் ஒவ்வொருபுத்தகத்திலும் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்கு மேற்பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமிஷன் தள்ளிக்கொடுக்கப்படும்.

லக்ஷ்மீநாராயணையர், மானேஜர்.